# சத்தப் பிரகரணம்

ஞானயோகி இரத்தின சற்குரு



துணை இணைப்பு : குரு - சிஷ்ய சாகஸம்

ஓம்

# சத்தப் பிரகரணம்



## ஞானயோகி இரத்தின சற்குரு

*சாந்தி நிலையம் அலங்கியம்-638 651*
*பெரியார் மாவட்டம்.*



---

*நீலகிரி காந்தல் ஸ்ரீ ஓம் பிரகாச சுவாமிகளின் 119-ஆம் ஆண்டு ஸ்ரீ ஓம் பிரகாச சுவாமிகளின் சீடரும், அத்வைத ஞானமன்றத்தின் நிறுவனரும், எங்கள் ஞான பீடமுமான,* **ஞானயோகி இரத்தின சற்குரு** *நாதரின் 86-வது ஆண்டும், எங்களை வழி நடத்திச் செல்லும் தற்போதுள்ள குரு-நாதரான* **தவயோகி சற்குரு ஸ்ரீ N.V. இராமன்** *அவர்களின் 64-ம் ஆண்டு தொடக்க நாளும் கூடிய நினைவு மலர்.*

---

---

*எமது ஞானமன்ற குரு நாதரிடம் உபதேசம் பெறாத எவரிடமும் அன்பளிப்போ நன்கொடையோ இந்நூல் வெளியீட்டிற்குப் பெறவில்லை. எங்கள் ஞானமன்ற ஆன்மீக தவசீல அன்பர்களின் பொருளுதவியாலும் நல்லெண்ணத்தாலும் வெளிவரக் குருவருள் பாலித்துள்ளது.*



---

*பதிப்பாளர் :*

**தவத்திரு. H. ரெங்கசாமி,**
8-A. ஐந்தாவது தெரு,
கிருஷ்ணாபுரம் காலனி,
மதுரை—625 014

சத்தப் பிரகரணம்.
ஞானயோகி இரத்தின சற்குரு

முதற்பதிப்பு : 1990
உரிமை : அத்வைத ஞான மன்றம்

விலை ரூபாய் : 6-25
அத்வைத ஞான மன்ற வெளியீடு-30



அகில அத்வைத சங்கரர் வாழியே!
அசலபீட வித்யாரண்யர் வாழியே!
விகித ஓம் பிரகாசரும் வாழியே!
விமல இரத்தின சற்குரு வாழியே!

அச்சிட்டோர் :
கண்மணி பிரிண்டர்ஸ்
மதுரை—625 002.

## பொருளடக்கம்


| | | பக்கம் எண் |
|---|---|---|
| | முன்னுரை. | |
| | பதிப்புரை | |
| | சத்தப்பிரகரண்ம் .. | 9 |
| 1. | முதல் பிரகரணம் .. | 10 |
| 2. | இரண்டாவது பிரகரணம் .. | 20 |
| 3. | மூன்ருவது பிரகரணம் .. | 32 |
| 4. | நான்காவது பிரகரணம் .. | 43 |
| 5. | ஐந்தாவது பிரகரணம் .. | 54 |
| 6. | ஆருவது பிரகரணம் .. | 57 |
| 7. | ஏழாவது பிரகரணம் .. | 63 |
| 8. | குரு-சிஷ்ய சாகஸம் .. | 70 |

ஓம்

எல்லாப்புகழும் இரத்தின சற்குரு ஒருவருக்கே!

# முன்னுரை

ஆன்மநேய அன்பர்களே!

தங்கள் கரங்களிலே தவழும் "சத்தப் பிரகரணம்" எனும் இந்நூல் எமது குருநாதரான **ஞானயோகி இரத்தின சற்குரு** அவர்களால் அவரது குருநாதரான **ஸ்ரீ ஓம் பிரகாச சுவாமிகள்** எழுதிய நூலுக்கு விளக்கமாகவும் தெளிவாகவும் எழுதப்பட்டது.

எங்கள் குருநாதரிடம் சங்கல்பமே கிடையாது. ஆயினும், அவருடைய மனம், வாக்கு, காயங்களைக் கருவியாகக் கொண்டு, தவசீல அன்பர்களின் கேள்வி, சந்தேகம், வேண்டுகோள் இவைகளை காரணமாகக்கொண்டு, உலகை உய்விக்கும் நிமித்தம் பகவான் இரத்தின சற்குருவை எழுதுவித்தது எனக்கொள்க! எங்கள் அத்வைத ஞான மன்றம் நூல் வெளியிடுவதே ஓர் அற்புதம் எனலாம். வரவு செலவு கணக்கின்றி - சேமித்த பணம் இருப்பின்றி - பாங்கியில் நிதியின்றி - நிலையான வருவாய்க்கும் வழியின்றி இந்நூல் குருநாதரிடம் உபதேசம் பெற்ற சீடர்களின் காணிக்கையால் அச்சிட்டு வெளியிட குருவருள் பாலித்துள்ளது.

முமுட்சுகளும், ஆத்ம தாக முள்ளவர்களும் இந்நூலினைப் படித்து ஆத்ம ஞானமும், பிறவாமுத்தியும் குருவருளால் எய்துவீராக!

இந்நூலினை எல்லோரும் படித்துப் பயன் பெற அழகாக அச்சிட்டு உதவிய மதுரை கண்மணி அச்சக செயல் வீரர்களுக்கு அத்வைத ஞான மன்ற சார்பில் இதய பூர்வமான நன்றி உரித்தாகுக!

குரு வாழ்க! குருவே துணை!!

என

கோபிசெட்டி பாளையம் உங்கள் அன்புச்சகோதரன்

12-08-'90 **K.S. சுப்பிரமணியன் M.Sc.,**

தலைவர் : **அத்வைத ஞான மன்றம்**

காந்தம் இரும்பு போல் கவர்ந்து என்னை விடாமல்
கல்ந்து என்னோடு இருப்பாய் குருநாதா!

# பதிப்புரை

வெள்ளை உள்ளம் கொண்ட வேதாந்த வித்தகர்களே!

அத்வைத ஞான மன்ற நிறுவனரும், எமது குருநாதருமான ஞானயோகி இரத்தின சற்குரு அவர்கள், நீலகிரி திருக்காந்தல் ஸ்ரீ ஓம் பிரகாசரின் சீடராக இருந்து அவருக்குப் பணிவிடை செய்து குரு விசுவாசத்துடன் வாழ்ந்த காலத்தில் எழுதப்பட்ட கட்டுரைகளின் தொகுப்பே **சத்தப் பிரகரணம்** எனும் இந்நூல்.

அமராவதி நதிக்கரை அலங்கியத்தில் பிறந்து – முஸ்லீம் பெண்ணால் இறையருள் பூத்து; காந்தல் குரு ஓம் பிரகாசரால் அத்வைத ஞானம் பழுத்து. பின் சாந்தி நிலையத்தில் ஆசிரம தவ வாழ்வு மலர்ந்து கோவையில் சிவமாயமாகியது குருநாதரின் ஸ்தூல உலக வாழ்க்கை!

அமராவதி நதிக்கரையின் ஒவ்வொரு அங்குலமும், நீலகிரி மலைத்தொடரும் குரு நாதரின் திருவடிகளால் புனிதமாயின. அப் பூமியின் மீது துளிர்த்த மண்ணிற்கும் இவனது வணக்கத்தை செலுத்துகின்றனன்.

அதிகாலை 4 மணிக்கே எழுந்து கால்நடையாக நீலகிரி மலையில் தனிமையில் செல்லும்போது வழியில் காணும் சாதுக்களின் கால் கழுவி சுத்தம் செய்து மலர் தூவி வணங்குவார். குருநாதர்களுக்கும் சீடர்களுக்கும் சாதுக்களுக்கும் அன்புப்பணி, தண்ணீர் கொணர்வது, வீடு கூட்டுவது, மெழுகுவது, விறகு வெட்டுவது, சமைப்பது, உணவு பரிமாறுவது, பாத்திரம் தேய்ப்பது – எல்லா வேலைகளையும் செய்து வந்தார். குருநாதரின் ஆடைகளுக்குச்

சோப்புப்போட்டு துவைத்துத்தந்து அதனால் மகிழ்ச்சியடை வார். எந்த இடத்திலும், எந்தப் பொருளின் மீதும் பற்று வைக்காமலும் பெரியோர் முன் அதிகம் பேசாமலும், அனுவசியமான விவாதங்களைத் தவிர்த்தும், எதையும் மிகைப்படுத்திப் பேசாமலும் வாழ்ந்து வந்தார்.

தினமும் காலையில் அவரை விரோதியாகக் கருதுபவர் களின் நல்வாழ்வுக்குத் தியானம் புரிந்தார் உலக ஆடம்பர வார சூழ்நிலையிலிருந்து ஒதுங்கி - தனிமை வாழ்வு வாழ்ந்து வந்தார். ஓம் பிரகாசரின் விசுவாசமான சீடராக விளங்கிய அவர் உலகப் புகழ் விரும்பாமல், மேடைப் பேச்சில் விருப்ப-மில்லாமல் வாழ்ந்தார் குருநாதருடன் வாழ்ந்த வாழ்க்கை எல்லோரையும் பிரம்ம சொரூபமாக எண்ணி நாள் முழுதும் நன்மை செய்துகொண்டே இருப்பார். தாம் சந்திக்கும் ஒவ்வொருவருக்கும் முதலில் இவர் வணக்கம் செலுத்து-வார். அவர்களை வாழ்த்தி ஊக்குவிப்பார் அவர்களுக்கு ஒரு பாராட்டு - அன்பான ஒரு வார்த்தை - ஆதாரவான ஆலோசனை — இப்படி எத்தனையோ நன்மைகளை பிறருக்கு செய்து தம் மனதை சுத்திகரித்து, தவ வலிமையைப் பெருக்கிக்கொள்வார். ஏனெனில் அன்றாட நிகழ்ச்சிகள் நம் தியானத்தைப் பாதிக்கும் அதனால் எல்லோரையும் பிரம்ம சொரூபமாக எண்ணி, நேசிக்க வேண்டும் என்பார்

நாம் பிறரைப் புண்படுத்தினால் அச்செயல் அன்றைய தியானத்தை தடை செய்யும். நம் சொல்லும் செயலும் சரியாக இருந்தால் தவம் பெருகும். நாம் யாருக்காவது விரோதமாகப் பேசியிருந்தால் அதை மனதில் வைத்துக்-கொள்ளாமல் மன்னித்துவிட வேண்டும். மறந்துவிட வேண்டும். மனதில் கசப்பில்லாதபடி இருப்பின் நிஷ்டை வலுப்பெறும் என்று குருநாதர் அடிக்கடி கூறுவார்.

நம்மைச் சுற்றியிருப்பவர்களுக்கு நன்மை செய்ய முடியுமா என்று யோசித்து செயல்படுத்த வேண்டும். மனிதனுக்கு ஆத்ம ஞானம் வளரவளர உலகப்பற்றும் பாசமும் குறையும் பாசக்கயிறு அறுந்து அந்த இடத்தில் அன்பு நிரம்புகிறது. 'அன்பே சிவம்' என்பார் குருநாதர்.

**வெறுப்பும் அச்சமும் தவத்திற்கு விரோதமானவை அன்பில் முழு நம்பிக்கை வைக்க வேண்டும்.** அன்பின் பலத்தால்-தான் இப் பிரபஞ்சமே இயங்கிக் கொண்டிருக்கிறது. அன்பின் ஆட்சியே தவத்தின் பிறப்பிடம். மற்றவர் மீது நல்லது பொல்லாது கற்பித்து நீதி வழங்கக் கூடாது. அவ்வாறு செய்தால் உங்கள் தவத்திற்கு நீங்களே ஊறு விளைவித்தவர்கள் ஆவீர்கள். ஆத்ம ஞானம் உள்ளவர்கள் எல்லோரிடமும் அன்பு செலுத்துவர் குருநாதருக்குக் கட்டு பட்டு நடப்பர். முணு முணுக்கமாட்டார்கள். ஆத்ம ஞான வாழ்க்கை பயமில்லாத வாழ்க்கை. எல்லோரையும் பிரம்ம சொரூபமாக எண்ணி வழிபட்டால் இங்கு அஞ்சுவதற்கு என்ன இருக்கிறது?

நமக்கு ஒவ்வாத தீமைகளைக்குறித்து அலட்டிக் கொள்ள லாகாது உடம்பாடான நல்ல அம்சங்களை காண்பதில் சிரத்தை கொள்ளவேண்டும். **முரண்பாடான முறையை மேற்கொள்பவர்கள்தான் பிறருடைய குறைகளைக் காண்பதில் சிரத்தை செய்கின்றனர்.** பிறரை நிந்திப்பதிலும் நியாயம் தீர்ப்பதிலும் ஈடுபடுகின்றனர்.

அவருடைய நடத்தை செயல் எண்ணும் பேச்சு குரு விசுவாசம் இவை எழுத்தில் எழுத இயலாது. அவருடைய குருநாதரிடம் அவர் வைத்திருந்த விசுவாசத்தில் 100-ல் ஒருபங்கு நாம் நம் குருநாதரிடம் வைத்தால் நம்மை வெல்ல உலகில் எந்த சக்தியும் கிடையாது எனலாம்.

சத்தப்பிரகரணம் என்ற இந்நூலை குருநாதர் எழுதும் போது அவருடைய குணங்களையும் செயல்களையும் எண்ணத்தையும் மேலே சுட்டிக்காட்டியுள்ளோம். எல்லோருடைய நல்லாசியாலும் குரு விசுவாசத்தாலும் அப்பியாசத்தாலும் தான் தவ வலிமை பெருகும். அன்றாட வாழ்க்கை நம் தவத்தைப் பாதிக்கும், அதற்கேற்ற மனப்பக்குவத்தை அடைந்து அப்பியாசத்தில் சிறந்து தவவலிமையை பெருக்கி நாம் 'அதுவாகி' இப் பிறவா முத்தி நிலையை எய்திட குருவருளைப் பிரார்த்திக்கின்றனன்.

எமது குருநாதரிடம் 30—6—76ல் சகஸ்ரார உபதேசம் பெற்றவரும் இல்லற ஞானியும், சிறந்த குரு விசுவாசமுள்ள சீடரும், சமீபத்தில் உடல் சலனம் நீங்கி பூரணத்துவமடைந்த, திருச்சி மாவட்டம், முசிறி வட்டம் காட்டுப்புத்தூரைச் சேர்ந்த தவத்திரு K.A. கோவிந்தசாமி அவர்களுக்கு சத்தப் பிரகரணம் என்ற இந்த ஞான நூலினைக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றனன்.

குரு வாழ்க! குருவே துணை!!

என்றும் தங்கள் சகோதரன்
அன்பு. H. ரெங்கசாமி
பதிப்பாளர்

மதுரை—14
12—8—90



**தவத்திரு. ஓம் பிரகாச சுவாமிகள்**

காந்தல் நீலகிரி

அகில அத்வைத சங்கரர் வாழியே!
அசல பீட வித்யாரண்யர் வாழியே!
லிகித ஓம் பிரகாசரும் வாழியே!
விமல இரத்தின சற்குரு வாழியே!



## ஞானயோகி இரத்தின சற்குரு

தோற்றம் : *14-8-1905* பூரணம் : *30-5-1986*

பிரம்மானந்த சொரூபமாகவும் மேலான சுகத்தைக்கொடுப் பதாகவும், ஞான வடிவாகவும், யாதொரு விகாரமும் இல்லாததாகவும், பிரபஞ்சத்திற்கு அப்பால்பட்டதாகவும், மகா வாக்கியங்களுக்கு இலட்சியார்த்தமாகவும், ஒரே பொருளாகவும், அசைவற்றதாகவும், எப்பொழுதும் சாட்சி மாத்திரமாகவும், பாவனைகளுக்கு அப்பால் பட்டதாகவும், முக்குணங்களும் இல்லாததாகவும் எங்கள் எல்லோருடைய இயக்கத்திற்கும் ஆதார சொரூபமாகவும் இலங்குபவர்.



ஞானமாதா இர. கங்காதேவி

தோற்றம் : 13-2-1915 பூரணம் : 13-1-1982

''குரவனாய் எனைப்பாவித்தே கொடும்பவக்கடல் கடந்தாள்
பரவிய பக்தியாலே பரநிலை தனை உணர்ந்தாள்
உரமுள பஞ்சகோச உரைதனை ஒழித்தப் பாலாம்
பிரம்மமாம் தனை அறிந்து பேரின்பப் பேரடைந்தாள்''



தவயோகி சற்குரு ஸ்ரீ N.V. இராமன்

சொல்லும், சொற்பொருளும், சொல்வோனுமாகி; அச்சமற்று உடலற்று—உயிராசையற்று, வாக்கற்று, போக்குவரவற்று கடுந்தவ சாதனையில் சிறந்து விளங்கும், அண்டகோளங்களையும் இயக்கி—அதன் தன்மையில் தாக்காற்று சாட்சியாக அறிவு சொரூபமாக விளங்கும்-எங்கள் அனைவரின் இயக்கத்திற்கும் காரணமானவருமான தற்போதுள்ள குருநாதர்—

ஓம்
குருவே துணை

# சத்துவ பிரகரணம்

பிரம்மானந்த சொரூபமாயும், மேலான சுகத்தைக் கொடுப்பதாயும், நிர்விகாரமாயும், ஞானவடிவமாயும், பிரபஞ்சாதீதமாயும், ஆகாசத்துக்குச் சமானமாயும், மகா வாக்கியங்களுக்கு இலட்சியார்த்தமாயும், ஒன்றாயும், நித்தியமாயும், நின்மலமாயும், அசைவற்றதாயும், எப்போதும் சாட்சி மாத்திரமாயும், பாவனைகளுக்கு அப்பாற்பட்டதாயும், முக்குணங்களும் இல்லாததாயும் இருக்கின்ற சற்குரு பகவானை வணக்கம் செய்கின்றேன்.

பரம்பொருளது கருணையாலே சீடனை மோகத்தினின்றும் விடுவித்தவராயும், ஏகசொரூபராயும், எல்லா உபநிடதங்களுக்கும் ஆசிரியராயும் இருக்கின்ற ஸ்ரீ ஓம் பிரகாசரெனும் நாமத்தையுடைய விகித குருவைப் பணிகின்றேன். ஓம்.

[சத்தப்பிரகரணத்தில் முதல் பிரகரணமாகிய இராகத் துவேஷாதிப் பிரகரணம்]

## இராகத் துவேஷாதிப் பிரகரணம் :

பூவுலகில் பிறந்த எல்லா உயிரினங்களுக்கும் உயர் நிலையடைந்த மனிதன், ஓரறிவு முதல் ஐயறிவு வரை மேம்பட்டு, பின் நன்மை தீமைகளை அறியும் பகுத்தறிவு பெற்று உலக இன்பங்களை உயர்மட்டத்தில் அனுபவிக்கிறான். மென்மேலும் உயர்நிலையடைய அறிவே அளவுகோலாக அமைகிறது. பகுத்தறியும் அறிவின் முதிர்ச்சியே விஞ்ஞான அறிவாகும். விஞ்ஞான அறிவினால் அளவற்ற உலக இன்பங்களை, இயற்கையை வென்று அடைகிறான். ஆனால் உள்ளத்தமைதியை அடைந்தானில்லை.

எனவே, உள்ளத்து அமைதி கண்டு பூரணத்துவமெய்த முயற்சிக்கிறான். அறிவின் பூரணத்து நிலையே சுகாதீத அறிவாம்; எல்லையற்ற அகண்ட பெருவெளி என்பதை உணருகிறான். முன்னும் அதுவாகவே இருந்து, பற்பல நிலைகளில் உழன்றும் [உலகவாழ்க்கை என்னும் பிறப்பு இறப்பு சக்கரத்தில்] பின்னும் அதுவாக வேண்டுவதே முடிவான நிலை. ஆதலால் அறிவை மேல்நிலைகளுக்கு உயர்த்தித் தன்னையறியும் அறிவாம் சுட்டறிவாகி, பின்பு அதுவும் கெட்டு, சுகாதீத அறிவாக அமைகிறான்.

"ஆங்கறியாமையும் அறிவும் நீங்கவே
ஓங்கிய அறிவோடும் ஒன்று பட்டவன்
தூங்கு பேரானந்தத் தூக்கம் வந்துறும்
மூங்கை கான் கனவென் முத்தி காண்டியே"

— சிவஞானவள்ளலார்

இவ்வித பேரறிவாம், பிரம்ம சொரூப நிலையடைய, நாம் நம் அறிவை உலக விஷய போகங்களில் செல்ல விடாமல் மேல்நிலைக்கு உயர்த்தவேண்டும். அறிவு அந்தக்கரணங்களோடு – மனதோடு – கூடி, உலக விவகார; உலக போகங்களை-சிவபோதத்தால் – நுகர விழைகிறது.

அறிவு மனோமயமாகுங்கால், உலக போகங்களின் ஆசை வளருகிறது. ஆசை சங்கல்ப, விகற்பங்களாக உருவாகி எண்ண அலைகளாக - நினைவுகளாக - விருப்பு வெறுப்பாதி-களைத் தோற்றுவிக்கிறது. எண்ண அலைகளான சித்தவிருத்திகளால் ஏற்படும் விருப்பால், காமமாதிய பதின்மூன்று குணங்கள் எழுகின்றன. விருப்பு வெறுப்பால், மனம், வாக்கு, காயம் எனும், திரிகரணங்களும் செயல் புரிகின்றன. செயல்களால் பாவ-புண்ணிய கர்மங்கள் ஏற்படுகின்றன. அவைகளே பிறவிக்கு வித்தாகிறது. எனவே இராகத் துவேஷமாகிய பதினாறு குணங்களில் பதின்மூன்று தள்ளத் தக்கன. மூன்று கொள்ளத்தக்கன.

**தள்ளத்தக்கன பதின்மூன்று :**

1. இராகம் [ஆசை] 2. துவேஷம் [வெறுப்பு] 3. காமம் 4. குரோதம் 5. லோபம் 6. மோகம் 7. மதம் 8. மச்சரம் [பொறாமை] 9. ஈரிஷை 10. அசூயை 11. டம்பம் 12. தர்ப்பம் 13. அகங்காரம் எனும் இப்பதின்மூன்று குணங்களையும், முத்தியில் விருப்பமுள்ள உத்தமர்கள் விட்டு ஒழிக்கவேண்டும். இக்குணங்கள் தீயவையாதலால் மனிதனை பாவச் செயல்களுக்குத் தூண்டி, சஞ்சித-ஆகாமிய கர்மங்களுக்கு வித்தாகிப் பிறவித் துன்பத்தைத் தருகின்றன இவைகள் முத்திக்குத் தடையாக உள்ளதாகும். எக்காலத்திலும் மனம், வாக்கு, காயம் எனும் திரிகரணசுத்தியாகத் தீண்டாமல் ஒதுக்கித் தள்ள வேண்டும்.

**1. இராகம் (ஆசை) :—** பிறமாதர்களை இச்சித்து அவர்களை அனுபவிக்க வேண்டுமெனும் கெட்ட எண்ணமே இராகம் ஆகும். இதை முத்தியில் ஆர்வமுள்ள அன்பர்கள் கொஞ்சமும் மனதில் பற்றாமல் முழுமனதுடன் விட்டுவிட வேண்டும். பிறர் மனைவி கமனத்தால் இராவணன், கீசகன், சுந்தோப சுந்தர் முதலானவர்கள் கெட்ட பெயர்பெற்று,

பந்துக்களையும், சுற்றங்களையும் இழந்து, நாடிழந்து, உயிரையும் இழந்து, முத்தியையும் இழந்து அபகீர்த்தி அடைந்தனர்.

"பகை பாவ மச்சம் பழியென நான்கும்
மிகவாவாம் இல்லிறப்பான் கண்"

பிறன் மனைவிமேல் காம இச்சை கொண்டலைவது மூடத்தனம். எனவே முமூட்சுகள் முதலில் விட்டொழிக்கவேண்டியது பெண்களிடமுள்ள விருப்பமே. இதனுல் அநேக துன்பங்கள் நேரும் என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

**2. துவேஷம் (வெறுப்பு) :-** தனக்கு ஒருவன் கெடுதல் செய்தால் அவனுக்குப் பதிலடியாகக் கெடுதி செய்ய வேண்டுமெனும் எண்ணமே வெறுப்பெனப்படுவதாகும். தன் பகைவனிடம் கொள்வதும் வெறுப்பான துவேஷமேயாகும். இதை முத்தியில் ஆர்வமுள்ள உத்தமர்கள் விட்டுவிட வேண்டும். "தீமைக்குத் தீமை செய்யாதே பகைவனையும் நேசி" என்பது இயேசுநாதர் போதனையாகும். பழிக்குப்பழி வாங்கும் தீய எண்ணத்தால் இரண்ய கசிபு, சூரபத்மன் முதலானோர் நாடிழந்து, நல்ல வாழ்விழந்து ஆவியிழந்து அனர்த்தங்களும் அனுபவித்தனர்.

"இகலெனும் எவ்வ நோய்நீக்கில் தவலில்லாத்
தகவில் விளக்கந் தரும்"

தீர்க்க முடியாத வியாதியைப் போன்ற குரோத வெறுப்பை நீக்கிவிட்டு ஒழித்துவிடல் முமூட்சுகளின் முக்கிய தன்மையாகும்.

**3. காமம் :-** மனைவி, மக்கள், பந்து–மித்திரர்கள், தன-தானியம்- வீடு – பூமி - பொருள் ஆகியவற்றில் பேராசை பிடித்து மேன்மேலும் எப்படியாவது சம்பாதிக்க வேண்டுமென்ற எண்ணமே காமம் எனப்படும். நரகாசுரன், துரியோதனன் முதலானவர்கள் மண்ணாசை-பெண்ணாசை–பொன்னாசை பிடித்து அதனுல் தம் வாழ்விழந்து அபகீர்த்திக்

காளாகி, மடிந்து கெட்டார்கள். முன்காலத்தில் நரகாசுரன் நூறாயிரம் கன்னிகைகளைக் கல்யாணம் செய்வதற்காக இச்சித்து தேவகன்னியர்கள் பதினாறாயிரம் பேர்களை சிறைப் பிடித்து வந்ததால், அதுகண்டு கிருஷ்ணபகவான் அவனுடன் போரிட்டு வென்று அவனை அழித்தார். ஆகவே முமுட்சுகள் காமத்தை அகற்றிவிடவேண்டும்

**4. குரோதம்:-** தான் செய்யுங் காரியங்களுக்கு யாராவது தடையாக இருந்தால் அல்லது அக்காரியத்தைக் கெடுத்தால் அவர்களிடத்தில் ஆக்கிரகமாக மனவேறுபாடு கொண்டுள்ள எண்ணமே குரோதமாகும். பகாசூரன் தன்னுடைய உணவுக்கு கெடுதி செய்த பீமன் மீது குரோதம் வைத்துப் போரிட்டு மடிந்தான். மற்றும் வாலி முதலானவர்கள் இக்குணத்தால் கெட்டழிந்து உயிர் துறந்தனர். இதனால் மற்றும் பற்பல இன்னல்கள் ஏற்படும். ஆகையால் முமுட்சுகள் குரோத குணத்தை அறவே அகற்றிவிட வேண்டும்.

''மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்த லதனான் வரும்''

ஒருவனால் தன் காரியத்துக்கு இடைஞ்சல் ஏற்படுத்துங்கால், குரோதமும் கோபமும் உண்டாகி, அவனுக்குத் தீமை செய்யும் எண்ணம் எழுதலால், கோபத்தை முத்தியிலார்வம் உள்ளவர்கள் அடியோடு விட்டொழிக்க வேண்டும்.

**5. லோபம்:** தான் சம்பாதித்த பொருள்களில் யாருக்குமே எள்ளளவும் தராமலும், தான-தர்ம-சிந்தையில்லாமலும், பொருள் காக்கும் பூதம்போல், காசே கடவுள் எனக்கருதும் எண்ணமே லோபகுணம் ஆகும். 'உண்ணான் - ஒளிநிரான் - ஓங்குபுகழ்செய்யான் - துன்னரும் கேளிர் துயர் களையான் - கொன்னே வழங்கான் - பொருள் காத்திருப்பானேல்' அவனால் உலகுக்கு உபகாரமுண்டோ? தானும்

புசியாமல், புசிக்கவரும் பசுவையும் தின்னவிடாமலிருக்கும் வைக்கோல்மேல் படுத்திருக்கும் நாய் போலுள்ள குணத்தை முமுட்சுகள் விட்டொழிக்க வேண்டும். இந்த லோபகுணத்தால் கம்சன், துரியோதனுதியர் கெட்டழிந்து நாசமடைந்தனரன்றே? எனவே, லோபகுணம் முத்தியை விரும்பும் உத்தமர்களுக்கு இருக்கக்கூடாது. ஈகையோடு இசைபட வாழ்தலே முமுட்சுகளின் மேலான மாண்பு.

**6. மோகம் :-** தன் உடமை, தன் பொருள் ஆகியவைகளின் மீது அபாரமான பிரியங்கொண்டு அதே ஏக்கமாய் பற்றுதலாக இருப்பது மோகமாகும். இராமன் மேலுள்ள பற்ருல் தசரதனும், இந்திரபோகத்தின் மீதுள்ள பற்ருல் நகுஷனும், அரசபோகநாசம், உயிர்நாசம், இகபர அபகீர்த்தி அடைந்து துன்பமுற்று நாசமடைந்தனர். இந்த உலகபோக பற்ருல் நமது கண்முன்பாக பலர் துன்பமும் தொல்லையும் அடைவதைப் பார்க்கிருேம். கேட்கிருேம். அனுபவத்திலும் உணர்கிருேம்.

''பற்றிவிடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றிவிடாஅ தவர்க்கு''

ஆகவே முத்திநெறி அறியும் உத்தம அன்பர்கள் மோகமெனும் பற்றை — உலக போகப் பற்றை — ஒழித்துவிட வேண்டும்.

**7. மதம் :-** செல்வச் செருக்கினுல், ஆணவமடைந்து செய்வது எது? செய்யத்தகாதது எது? என்பதறியாமல் நான் என்னும் அகம்பாவம் பிடித்தலைவதே மதம் என்பதாகும். மற்றும் மதம் எனும் சமய, சாதி பேதத்தால் மதபேதமோதி மதி கெடுவதும் மதமாகும். இதனுல் கார்த்த வீரியார்ச்சுனன் - விருத்திராசுரன் முதலானவர்களும் தற்காலத்தில் ஹிட்லர், முசோலினி முதலானவர்களும் எவ்வளவோ உலகப்புகழ் பெற்றிருந்தும், படை

வலிமையுற்றிருந்தும் கெட்டழிந்து ஆணவ மதச் செருக்கால் எல்லாம் இழந்து முடிவில் அறுமதேயமாய் உயிரிழந்து மடிந்து மண்ணுயினர். எனவே, என்னது - யான் என்னும் செருக்கை - மதத்தை முத்தியிலே ஆர்வமுள்ள உத்தம அதிகாரிகள் அறவே விட்டொழித்தல் மிக அவசியமாகும்.

**8. மச்சரம் (பொறாமை) :-** அன்னியர் சுகபோகத்துடனிருந்தால் அவர்களைப் பார்த்துச் சகியாமல், அவர்கள் கெட்டுப் போகவேண்டும் என்னும் எண்ணமே மச்சரம் என்னும் பொறாமைக் குணமாகும். முற்காலத்தில் சிசுபாலன் பாண்டவர் செய்த ராஜசூயயாகத்தில் கிருஷ்ண பரமாத்மாவுக்கு அக்ர தாம்பூலம் — முதல் மரியாதை கொடுத்ததைச் சகியாமல் பொறாமையால் பலபடப்பேசி உயிரிழந்தான். சிசுபாலன், சகுனி, கர்ணன் முதலானவர்கள் இந்தப் பொறாமைக் குணத்தால் சொல்லொண்ணாத் துக்கமும் துன்பமும் அடைந்து இறந்துபட்டனர். எனவே, இக்குணத்தை ஒழிக்கவேண்டும் நற்பண்புள்ள முமுட்சுகள்.

**9. ஈரிஷை :-** தனக்கு வந்துற்ற துக்கமும் கவலையும் பிறருக்கும் வரவேண்டும் எனும் கெட்டகுணமே ஈரிஷையாகும். முற்காலத்தில் அருணுட்சதன் எனும் அரக்கன் தனக்கு வந்த துன்பம் போல வாணுசுரனுக்கும் வரலாகாதோ? என்று எதிர்த்து நாசமடைந்தான். இக்கொடுங்குணத்தால் அருணுட்சதன், சராசந்தன் முதலானோர் தாமும் அழிந்து அபகீர்த்திக்கு ஆளாகி, அதோகதியடைந்தனர். ஆகவே ஞானமார்க்கத்தை நாடும் அன்பர்கள் இக்குணத்தை விட்டுவிடவேண்டும்.

**10. அசூயை :-** தமக்கு வந்த சுகம் மற்றவர்களுக்கு வரலாமா? அவர்கள் தம்மைவிட சுகபோகமாக வாழலாமா? எனும் கெட்ட எண்ணமே அசூயை எனப்படும். பவுண்டரீக வாசுதேவன் என்பவன் தன் பெயர் போல வாசுதேவன்

எனும் பெயர் கிருஷ்ணனுக்கு இருப்பதா? என்கிற அசூயையால் அழிந்தனன். இக்கொடுங்குணத்தால் பவுண்டரீக வாசுதேவன், இந்திரன் முதலானோர் இழிநிலையடைந்து தங்கள் அரசு செல்வம் எல்லாம் இழந்து கொடுந்துன்பத்துக்கிலக்காயினர். ஆதலால் பிறரைக்கண்டு அசூயை கொள்ளும் தீயகுணத்தை முத்திநெறியடைய அவாவுறும் அன்பர்கள் அகற்றி விடல்வேண்டும்.

**11. டம்பம் ;—** தான் செய்யும் தருமத்தையும், செயல்களையும் நான்குபேர் பார்த்து, "ஆகா! நன்றாயிருக்கிறது" என்று மெச்சிப் புகழ வேண்டுமெனும் வீண்கௌரவம் கொள்ளும் விபரீத குணமே டம்பம் ஆகும். இவ்வித ஆடம்பரமான டம்பாச்சாரித் தனத்தால் கெட்டழிந்தவர்கள் எண்ணிலடங்காது. தற்போது துறவிகள் எனப்படுவோர்கூட ஆடம்பரமான சுகபோக வாழ்வு வாழ்ந்து பிறர் மெச்சக் காவியுடையில் திரிகின்றனர். ஆத்மீக வாழ்வை மேற்கொண்ட அன்பர்கள் ஆடம்பரமான டம்பாச்சாரித்தனத்தை அறவே அகற்றவேண்டும்.

**12. தர்ப்பம் :—** மனைவி, மக்கள், தனம், தானியம், சொத்து சுகம், பூமி காணிகள் தனக்கேயுண்டு. தனக்கொருவரும் ஈடில்லை எதிரில்லை. என் செல்வாக்குக்குச் சமமானவர் எவருண்டு? என்னும் மமதையே தர்ப்பமாகும். புராண இதிகாச காலத்தில் இரண்யன்-இராவணன் முதலியோர் இவ்வித மமதையால் தன் அரசாட்சி, அரச, சுக, போகங்கள் இழந்து மாண்டு மறைந்து ஒழிந்தனர். எனவே, நம்மை நாமே படுகுழியில் வீழ்த்திக் கொள்ளும் யாரையும் உதாசீனப்படுத்தும் மமதையான தர்ப்ப குணத்தை ஒழித்துவிடவேண்டும்.

**13. அகங்காரம் :—** நான் எனும் ஆணவமாகும். அடே! என்னை யாரென்று நினைத்தாய்? நான் எடுத்த

காரியத்தை விடுவேனு? நீயா எனக்கு புத்தி சொல்கிருய்? எனப் பிடிவாதமும் அட்வாதமும் செய்யும் அடங்கா ஆணவம் பிடித்தலேவதே - நான் எனும் அகந்தையே அகங்காரமாகும். இந்த அகங்காரம் மிகக்கொடியது. அதுவும் ''தேகமே நான்'' என்னும் அகங்காரமே பிறவிக்கு வித்தாகும். முத்தித் தடையாகும். எனவே நம்மைப் படு குழியிலாழ்த்திப் பல சாகரத்தில் வீழ்த்தும் 'நான்' என்னும் அகங்காரமே முமுட்சுக்களுக்கு அறவே கூடாது.

''ஏற்றமாம் அகங்காரங்கள் இரண்டினுல் பரமமெய்தி
யூற்றமாம் அவற்றை நீக்கி ஓர் அகங்காரமுமின்றி
ஆற்றலால் நிற்றியெனில் அறவுயர் பதமதாரும்
தோற்றுடல 'நான' எனுமை சுருதிகள் சொல்லும் முத்தி''

— ஞான வாசிட்டம்.

ஆன்மநேய அன்பர்களே! இதுவரை கூறிவந்த இராகத் துவேஷாதி, துற்குணங்களால், உலகிலுள்ள, முற்கால வரப்பிரசாதபலவான்களான, ஏகசக்ராதிபதிகளான அசுரர் கள், தேவர்கள், அரசர்கள், ஆகியோர்களும், தற்கால சர்வாதிகாரிகளாக இருந்த வீராதிவீரர்களும் சக்கரவர்த்தி களும்,அளவிலடங்காத துன்பமும், கவலேயும், மனவியாதியும் உடல்நலிவும் உள்ளத்துக் கள்ளமும், அறியாமையும் அடைந்து சனன மரணப்பிடிப்பில் சிக்சி உழன்றழிந்தனர். மற்றும் பொருள்சேதமும், பந்துஜனவிரோதமும் அழியா அபகீர்த்திகளும் அடைந்ததை பிரத்தட்சியமாகவும் சரித்திர நூல்கள் வாயிலாகவும் பார்க்கிறேம். இந்தப் பதின்மூன்று குணங்களும் முத்தி நெறிக்குப் பகையாயும் தடையாயும் இருப்பதாலும் பிறவிக்கு ஏதுவாக இருப்பதாலும் முத்தியில் ஆர்வமுள்ள நீங்கள் முழுமனதுடன் ஒழித்துவிட வேண்டும். இச்சரீரம் நமக்கு நரகமாகும். ஏனெனில் இச்சரீரமிருப்ப தால்தான் நமக்கு இந்தத்துர்க்குணங்கள் ஏற்படுகின்றன.

இனிப்பிறவாதிருக்க — வழிவகை செய்தல் வேண்டும். இச்சரீரம் இருக்கும்போதே இக்குணங்களை ஒழித்து-விட்டால் பாவம் பற்றுமலிருக்கும். அந்நிலையில் தன்னை-யறிந்து பிரம்ம சொரூபமாகிப் பிறவியையும் ஒழித்து விட முடியும்.

**கொள்ளத்தக்கன மூன்று :-**

1. இச்சை, 2. பக்தி, 3. சிரத்தை எனும் குணங்களாகும்.

**1. இச்சை :-** மலம், மூத்திரம் விடுதல் செய்ய வேண்டு மென்னும் நிர்ப்பந்தமே இச்சையாகும். இவை செய்யா விடில் துன்பமும் செய்தால் சுகமாகவும் இருக்கும். இதனுல் நமக்குப் பாவமோ, புண்ணியமோ இல்லை. எனவே, இந்த இச்சை கொள்ளத்தக்கது.

**2. பக்தி :-** பிரம்மசொரூபத்தினிடத்திலும், ஆன்ம சொரூபத்தினிடத்திலும். குரு பகவானிடத்திலும், முத்தியிலும், ஏற்படும் எண்ணத்தின் திண்ணமே பக்தியாகும். இதுவும் கொள்ளத்தக்கது.

**3. சிரத்தை :-** வேதாந்த ஞான சாத்திரங்களிடத்திலும் சற்குரு நாதரிடத்தும் மிகவும் விசுவாசம் வைத்திருக்கும் நல்ல எண்ணங்களே சிரத்தை என்னும் குணமாகும். அதுவும் சிரத்தை முத்தியை அடைவதற்கு ஏதுவாகவும், உதவியாகவும் இருப்பதாலும், இந்தச் சிரத்தா-பக்தியினுல் உத்தம மக்களான முமூட்சுகள் இரண்டு நாழிகையிலேயே முக்திப்பேறு அடையலாம். ஆகையால், சாதன சதுட்டய சம்பன்னனுன உத்தம ஞானவான்கள் இவைகளை அவசியம் கைக்கொள்ள வேண்டும். பிறப்பிறப்பாம் துன்பத்துக்கு ஆளாகாது. பந்தங்களில் கட்டுப்படாது. சர்வ துக்க நிவர்த்தியும், பேரின்பப் பிராப்தியாம் முத்திக்கு இலக்-காகும். விடுதி சென்மத்தவரால் வெறுத்து விலக்கத்தக்க தான பதின்மூன்று குணங்களையும் வேரோடு கெல்லி

எறிந்து கொள்ளத்தக்கதான சத்துவ குணங்களை மேற்கொண்டு உய்வடைய சற்குரு ஸ்ரீ ஓம் பிரகாச நாதர் நம்மவர்கள் மீது ஆட்கொண்டு கருணை பாலிக்க வேண்டுகின்றனன். ஓம்.

''ஐவகை யெனும் பூத மாதியை
யாவையும் வகுத்து நல்லறிவையும் வகுத்து மறையாதி-
நூலையும் வகுத்து
சைவ முதலளவில் சமயமும் வகுத்து மேற்சமயம் கடந்த
மோன
சமரசம் வகுத்த நீ யுன்னைநான் அணுகவுந் தண்ணருள்
வகுக்கவிலையே
பொய் வளரும் நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யில்லா மெய்யறிவில்
போத பரிபூரண அகண்டிதாகாரமாய்ப் போக்குவரவற்ற
பொருளே
தெய்வ மறைமுடிவான பிரணவ சொரூபியே சித்தாந்த
முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தட்சிண மூர்த்தியே சின் மயானந்த
குருவே''

— தாயுமானவர்

இராகத்துவேஷாதிப் பிரகரணம் முற்றும்.

---

# 2. சாதன சதுஷ்டயப் பிரகரணம்

முதல் பிரகரணத்தில் நிலையற்ற கற்பனை வடிவமான உலக விஷய சுகங்களைப் பிரியமாக அபிமானித்து, அதில் ஈடுபட்டுச் சுழலும் மனதுக்கு, அவை துன்பமென விளக்கி வைத்து, அந்த இராகத்துவேஷக் காமக் குரோதிகளிலிருந்து விலகி, உண்மையான ஞானவழியில் அபிமானம் வைக்கும்படி செய்து அதனால் உண்டான சிரத்தை பக்தியினால் சித்தசுத்தி ஏற்பட்டபின் ஞான வழியில் முன்னேற சாதன சதுட்டயப் பிரகரணம் விவரிக்கப்படுகிறது. வேதாந்த நூல்களில், பிறவியொழிந்து முக்தி பெறவிழையும் உத்தமர்கள் பின்பற்றக் கூடியவை. 'நான்கு சாதனங்கள்' என்று வற்புறுத்திக் கூறப்படுகின்றன. அவைகளாவன;

1. நித்தியா நித்ய வஸ்து விவேகம்
2. இகபர பலபோக விராகம்
3. சமாதி சட்க சம்பத்தி
4. முமூட்சுத்வம் — முத்தியில் இச்சை என்பதாகும்.

மக்களாகிய நாம், எவ்வித காரியங்களில் இறங்கி ஈடுபடினும் அதற்கேற்ற சாதனங்களை அவசியம் அடைந்தாக வேண்டும். நாம் ஒருவருக்குக் கடிதம் எழுத வேண்டுமென்றால், அதற்குரிய சாதனங்களாகிய காகிதம், பேனா, மை, முயற்சி முதலான சாதனங்கள் அவசியம் இருந்தாக வேண்டும். இவைகளில் ஒன்று குறைந்தாலும் அந்த வேலை தடைப்பட்டு முடியாமல் போய்விடும். சாதாரணமாக உலக காரியங்களுக்கே தக்க சாதனங்கள் அவசியம் வேண்டுமென்றால், பிறவியை ஒழிக்கப்புகும் - பிறவியை அடைய

விரும்பும் - ஒருவனுக்கு - மேற்கண்ட சாதன சதுட்டயங்கள் அவசியம் உண்டாகி இருக்க வேண்டும். சாதனமில்லாமல் ஒரு காரியத்தையும் சாதிக்க முடியாதென்பது யாவரும் அறிந்ததாகும். ஆகவே, ஞான சாதனங்களை நாம் அடைந்தாக வேண்டும்.

## 1. நித்தியா நித்ய வஸ்து விவேகம் :-

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு''

எனத் தமிழ்மறை இயம்புவதற்கிணங்க இந்தப் பராதி அண்டங்களில் எந்தப்பொருள் 'நித்தியமானது? அதாவது அழியாதது எந்தப் பொருள் அநித்தியமானது. அழியக் கூடியது என்பதை நன்கு நாம் ஆராய்ந்து, சிந்தித்து முடிவு செய்ய வேண்டும். அறிவு என்னும் உரைகல்லிலே உரசிப் பார்த்து, அந்தந்தப் பொருள்களின் உண்மைத் தன்மையை உணரவேண்டும். அதோடு, சுருதி - குரு - மகான்களின் - வாக்கியங்களையும் அனுபவங்களையும் உய்த்துணர்ந்து தெளிவாக ஐயமின்றி அறியவேண்டும்.

வேதாந்த நூல்களின் முடிவு **பிரம்மம்** (சிவம்) **நித்தியம்** (சத்தியம்) கண்களில் தோற்றலான **நாம ரூபப் பிரபஞ்சம்** (ஜகத்) **அநித்தியம்** (மித்யா) எனவே நமது கண்முன் காணப்படும். பஞ்சபூத பௌதிகங்களான எல்லாப் பொருள்களும் மாறக்கூடியதும் அழிக்கக்கூடியதுவேயாகும். நால்வகையோனி, எழுவகைத் தோற்றம், எண்பத்து நான்கு லட்சம் பேதங்களாக உள்ள சரீரங்களெல்லாம் மண்ணிலே தோன்றி மண்ணிலே மறைந்து அழிவதென்பதை அனுபவ பூர்வமாக அறிகிறோம்.

''நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்து இவ்வுலகு''

— எனத் தமிழ்மறையும்

''முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு
பிடிசாம்பலாய் வெந்து மண்ணுவதும்கண்டு''

என்று பாரனைத்தும் பொய்யெனவே பார்த்த பட்டினத்தடிகளும் பகர்வது உணர்க! மற்றும் தேவர், மனிதர், மிருகம், பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் ஆகிய ஏழுவகைத் தோற்றங்களும் அழியக்கூடியனவாகும். நம் கண்முன்னே நம் தாய் தந்தை முதலான உற்றார், உறவினர் நட்பினர் எல்லாம் மடிந்து அவர்கள் சடலங்களை மண்ணில் புதைத்தோ, சுட்டுச் சாம்பலாக்கியோ வந்திருக்கிறோம். அவர்கள் உடல்கள் மடிந்து மறைந்தது போல நமது உடலும் ஒரு காலத்தில் - இன்றோ - பிறகோ மடிந்து மண்ணாகிப் போகும் எனும் உண்மையை நாம் நன்குணர்ந்து கொள்ள வேண்டும்.

''குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு''

கடலில் எப்படி அலை - திவலை - நுரை - குமிழிகள் தோன்றி சிறிது நேரத்தில் ஒடுங்குகிறதோ! அதுபோல இந்தப் பூமியாகிய மண்ணிலிருந்து எல்லாப் பிராணிகளும் தாவரங்களும் உண்டாகி சிலகாலம் நின்று, அதன்பின் மீண்டும், உதித்த அம்சமான மண்ணோடு மண்ணாகி விடுவதை நாம் பிரத்யட்சமாகக் கண்டும் கேட்டும் இருக்கிறோம் அப்படியிருந்தும் நாம் இன்னும் நிலையாக வாழ்வோம் என்று நினைத்து செயலாற்றிவருவது பேதமையாகும். நம் கண்முன் காணப்படும். திருசியங்களான - தோற்றங்களான - நாமரூப தோற்ற பௌதிகங்களெல்லாம் அநித்தியம் என்பதை உறுதியாக - உண்மையாக உணர்தல் வேண்டும். 'தேகம் நமதல்ல நம்முடையதுமல்ல!' எனும் உண்மையை உணருதல் அவசியமாகும்.

அடுத்து பஞ்சபூதங்களும் அழியக்கூடியவை-அநித்தியம் ஒடுக்கநிலை - அபவாதப்படி. பூமி, பிரளய காலத்தில், நீரில் மூழ்கி கரைந்து நீராகிவிடுகிறது. நீர் வடவாமுகாக்கினி-யாலும் சூரிய வெப்பத்தாலும் சுண்டி, தீய்ந்து நெருப்பாகி விடுகிறது. நெருப்பும் பிரசண்ட மாருதத்தால் சிறுசிறு அணுக்களாகப் பிரிந்து காற்று ஆகிறது. காற்றணுக்கள் நுண்ணிய அணுக்களாகி அமைதி அடையும்போது ஆகாய-மாகிறது. ஆகாயமாகிய பூதம் சூன்யாகாயத்தில் ஒடுங்கி நுண்ணியதாகி மறைந்து ஒழிந்து போகிறது. எனவே, பஞ்ச பூதங்களான ஆகாசம் - வாயு - தேயு - அப்பு - பிருத்வியு ஆகிய எல்லாப் பொருள்களும்-திடபார்த்தங்-களும் அதுபோலவே பஞ்சபூத விகாரமான(சேர்க்கையான) உடல்களும் மறைந்து அழியக்கூடியது என்பதை நாம் உறுதியாக நம்பி அந்த அனுபவத்திலேயே செயலாற்றி-வரல் வேண்டும். தேகத்தில் அகம்புத்தியும் சகத்தில் சத்திய புத்தியும் இல்லாமல், எல்லாம் பொய்த் தோற்றம் என்பதை அனுபவ வாயிலாக அறிவதே ஆத்மவிசாரம் ஆகும். அடிக்கடி சதா, நம் கூரிய அறிவால், சிந்தித்துச் சிந்தித்து உண்மையாகக் கண்கூடாக அனுபவத்தில் உணர வேண்டும். மற்றும்

'நித்தியப் பொருள் யாது?' என ஞான அறிவா-ராய்ச்சியிலிறங்கும் போது, முன் ஒடுக்க நிலையிலுரைத்த படி சூன்யாகாசம் பரமாகாசத்தில் இலயமாகிவிடும். அப்பரமாகாசமான மாயை பிரம்மத்தில் இலயமாகும். அந்தப் பிரம்மம் ஒன்று மாத்திரம் மீதமாகி நிற்கும். எனவே, ஆன்மாவான தன்னை அறிந்த சுட்டறிவால் மாயை ஒழிய சுட்டறிவும் கெட்டு, சுகாதீத அறிவாம், பிரம்ம சொரூபமே நித்தியமாக உள்ளது.

ஆத்மஞான விசாரணையின் முடிவில், இவ்வுலகையும் இவ்வுடலையும் இயக்கும் பேராற்றலும் பேரறிவுமான பிரம்ம வடிவான ஆன்மா நித்தியமானது என அனுபூதியி-

லுணருகிறோம். சுருதி, யுக்தி, அனுபவத்தாலும், குரு-பகவானிடமிருந்து பெற்ற கேள்வி, ஞானத்தாலும், உபதேசத்தாலும், இவ்வுண்மையைச் சந்தேகமில்லாமல் அனுபவத்தில் உணர்ந்து கொள்ளுவதே நித்யா நித்யவஸ்து விவேகமாகும்.

## 2. இகபர பல போக விராகம் :

ஒருசில, அரைகுறைப் படித்தவர்கள், தங்கள் வாய்ப் பேச்சு சாதுரியத்தால், 'ஆன்மா நித்தியம்-ஜகத்அநித்தியம்' எனக் கூறிக்கொண்டு ஆனால், உலக போகங்களில் இச்சை கொண்டு பெண், பொன், ஆசை கொண்டலைவதால் அநித்தியமான பொருள்களே நித்தியமாகிவிடும் நிலை-யாவதால் இரண்டாம் சாதனமான இக-பர-பல-போக விராகம் நமக்கு அவசியம் இருக்கவேண்டும், அவை இக-லோக - இக - உலக வைராக்கியம், பர - சுவர்க்க லோக-வைராக்கியம் என இருவகைப்படும். இகவுலக விஷய போகங்களாவன;

பெண்கள் உடலுறவு, ருசிகரமான உணவு, நறுமணம் முதலான ஐம்புலன் நுகர்ச்சிகளில் வெறுப்பு ஏற்பட வேண்டும். மலம்,மூத்திரம்,வாந்தியான உணவு முதலிவை-களில் எப்படி அருவருப்புக் கொண்டு விலக்கி விடுகிறோமோ! அதுபோலவே, 'ஐம்புலன்களின்பங்களை நாம் அனுபவித்தது தானே' என எண்ணி அவற்றை அறவே வெறுத்து உதா-சீனமாகி விலக்கி விடவேண்டும். பெண்களினால் பயம்-பகை-ஆவல்-அபகீர்த்தி உண்டாவதாலும், அவளால் உண்டாகும் இன்பத்தை விடப் பலமடங்கு துக்கமும் துன்பமும் ஏற்படு-வதாலும்,

பணம் சம்பாதிக்க அரும்பாடுபட்டும் கிடைப்பதற்கரி-தாகையாலும் பொருளினால் விரோதம் - குரோதம் -பயம் பேராசை - லோப குணம் முதலான தீயகுணங்களும், அவற்றால் துக்கமும் துன்பமும் ஏற்படுவதாலும்,

உலக போகங்கள் முதலில் சிறுஇன்பம் தந்து, முடிவில் பேரிழப்பையும், பிணியையும், வேதனையையும், துன்பத்தையும் உண்டாக்குவதாலும், இந்த இகவுலக போகங்கள், அனுபவிக்கும் சுகங்கள், சிற்றின்பம் ஆதலாலும் அழியக் கூடிய நிலையுற்றதாலும்,

நாம், தினந்தினம் அனுபவித்து அனுபவித்துக் கழித்தெறிந்தவைகளாதலாலும்; உண்டதே உண்டும்; உடுத்ததே உடுத்தும்; கண்டதே கண்டும்; கேட்டதேகேட்டும்; புணர்ந்ததே புணர்ந்தும்; அனுபவித்ததே அனுபவித்தும் நாட்கள் கழிந்தவையாதலால், அவற்றில் சலிப்பு ஏற்பட்டு உதாசீனமாக ஒதுக்கிவிட வேண்டியது மிகவும் அவசியமாகும். தீவிரமான திடசித்த — வைராக்கியத்துடன் விட்டுவிட வேண்டும்.

இதுபோலவே, பரலோக இன்பமெனும் தேவபோகங்களையும் வெறுத்தொதுக்க வேண்டும். முதலாவதாக நாம் அறிந்து கொள்ளவேண்டிய முக்கிய விஷயம் தேவலோகம் சொர்க்கலோகம் என்பதே கற்பனையாகும். அது வெறுங் கட்டுக்கதை! மாயாஜால மயக்க வார்த்தை!

''செத்தபிறகு சிவலோகம் வைகுந்தம் சேருவோமென்றெ
எண்ணியிருப்பர்—பித்த மனிதர் அவர் சொல்லும் சாத்திரம்
பேயுரையாம்'' —பாரதியார்

பொய்யான இக்கற்பனையுலகம் புக நாம் மெய்யாகவே உலகில் மெய் வருந்தி தான - தர்மம் - தவவிரதம் போன்ற ஆகிய புண்ணியங்கள் செய்ய மிக்க சிரமப்பட்டு பொருள் தேட வேண்டும். பின்பு சாஸ்திர விதிப்படிநடக்க வேண்டும். இப்படிப் பிரயத்தனப்பட்டு மெய்வருந்திக் கிடைக்கும் தேவலோக, சுவர்க்க போகங்களும் நித்தியமா? இல்லையே! நிலையற்றவையாகவன்றோ தெரிகிறது. இகலோக வாழ்வு இரும்பு விலங்கு என்றால் பரலோக வாழ்வு என்பது பொன்விலங்குதான். அக்கரைக்கு இக்கரைப்

பச்சை என்பது போல இகபுரம் இரண்டுமே பந்தம்தான். பரலோகமெனும் தேவ போகங்களிலும் துன்பமே காணக் கிடக்கிறது. அசுரர்களால் இந்திரன் முதலானோர் பட்ட தொல்லைகளும், துன்பங்களும், அடைந்த இன்னல்களும் அளவிலடங்காதனவே? மேலும் மனிதர்கள், மகரிஷிகள் ரிஷிபத்தினிகளால் சாபம் அடைந்து மூவர்களும், தேவர்களும் இழிநிலையடைந்து கேவலப்பட்டு, துன்பமுற்றிருக்கின்றனர். மற்றும் நல்வினைப்பயன் முடிந்ததும் மறுபடியும் மனிதனாகவோ, வேறு எந்தப் பிராணியாகவோ பூமியில் பிறந்துதான் ஞானம் அடைந்து, ஆத்ம ஞானத்தால் முத்தி சித்திக்க வேண்டியிருக்கிறது. ஆதலால் பரலோக சுக இச்சையும் பயனற்றது எனத் தெளிவாக ஐயமின்றித் தெரிந்து கொள்ளவேண்டும். எனவே, இகத்திலும் பரத்திலும் உள்ள சுக போகங்களை உதறித்தள்ளி மீண்டும் அந்த வாடை கூடி அடிக்காதபடி திட வைராக்கியத்துடன் இருப்பது அவசியமாகிறது.

### 3. சமாதி ஷட்க சம்பந்தி :

சில ஏமாற்று வேடதாரிகள் காவி, ருத்ராத்சமணிந்து சந்நியாசி எனப் பெயரிட்டுக்கொண்டு, குடும்பத்தையும் விட்டுவிட்டு, தன் உடல் நலம் பேணி, வயிறு வளர்ப்பதற்காக சுயநலம் கொண்டு, சிற்சில வித்தைகளைக் கற்றுக் கொண்டு, தான் பெரிய மகான் என்று பேசிக்கொண்டும், 'எனக்கு நிகர் யார்?' என மமதை கொண்டு, சபிப்பதும் வைவதும் செய்து, இதனுல் வெகு இன்னல்களடைந்து, துக்கங்கொண்டு, முன்பிருந்தஇில்லற தர்மங்களையும் கைவிட்டுவிட்டு பின்னுள்ள துறவற தர்மப்படியும் இல்லாமல் இரண்டுங்கெட்டானாய் போய்விடுகிறபடியால் இக - பர - சுக துக்க கர்மங்களை விட்டு, நிராசையாயிருக்கின்ற இரண்டாம் சாதனம் கைவந்தாலும், மூன்றும் சாதனமாகிய சமாதி ஷட்க சம்பந்தியும் பெறவேண்டும். அவைகளாவன.

1. சமம் 2, தமம் 3. விடல் 4. சகித்தல் 5. சமாதானம் 6. சிரத்தை ஆகியவைகளே.

**1. சமம்** :- மனதை ஒருமுகப்படுத்தல் என்பதாகும். மனஅடக்கம், மனதில் எண்ண அலைகள் எழுந்து அந்த நினைவுகளால் உந்தப்பட்ட ஆசைகளால், பற்பல கர்மங்களும், அவற்றால் துன்பங்களும், விருப்பு வெறுப்பாதிகளும், வேகமாக ஏற்படுகின்றன. எனவே, மனம் லயமாக ஏதேனும் ஒரு வழியைச் சார்ந்து சாதனைபுரிய வேண்டும். மனத்துள்ளல் அடங்க, 'குண்டலினி யோகப் பயிற்சி' சிறந்த சாதனமாகும். அதை நாள்தோறும் அப்பியாசம் செய்து வந்தால் எண்ண அலைகள் அடங்கி அவா அகன்று மனம் அமைதி அடைகிறது.

**2. தமம்** :- ஐம்புலன்களான, மெய்—வாய்-கண்-மூக்கு-செவி ஆகியவைகளை வெளி விஷயங்களில் செல்லவொட்டாது. ஆமை ஐந்துறுப்புகளையும் அடக்கிக் கொள்வது போல் தடுத்து அடக்குதல். ஓரே ஒரு இன்ப நுகர்ச்சியால் பரிச சுகத்தால் யானையும், நாவுருசியால் மீனும், ரூபவிடயத்தால் விட்டிற்பூச்சியும், வாசனையால் வண்டுகளும், செவிப்புல இசையால் மான்களும் கெடுகின்றன. எனில் ஐம்புலன்களாலும் இன்ப நுகர்ச்சியை விழையும் மானிடன் கெட்டுப்போவதில் வியப்பில்லை. மனிதன் சம்சாரபந்தத்தில் வீழ்ந்து பந்தமடைய இவ்விடய சுகங்கள் துணைபுரிகின்றபடியால் ஐம்புலன் — பொறிகளின் — அடக்கம் அவசியமாகிறது.

**3. விடல்** (உபாதி) ;— நமது செயல்களைத் தியாகம் செய்வதாகும். செயலினால் - கர்மத்தால் - பாவ புண்ணியங்கள் பற்றுகிறது. நற்செயலான புண்ணிய கர்மத்தாலும் அதை அனுபவிக்கப் பிறவி எடுக்க நேரிடுகிறது. துர்செயலான பாவ கர்மத்தாலும் அதை அனுபவித்துத் தீர்க்க

துன்பமும் இழிபிறவியும் உண்டாக நேர்டுகிறது. எனவே, துர்செயலை அறவே விட்டுவிட வேண்டும். அப்போது பாவம் பற்ருது. நற்செயல் செய்யும்படி ஏற்படின் அதையும் பற்றற்று-சுயநலமற்று செய்யவேண்டும். மற்றும்,

எல்லாச் செயல்களும் கருவி கரணுதிகளின் இயக்கமே என்னும் உணர்வாலும்' 'ஆன்மா சாட்சி மாத்திரமே' எனும் ஆத்மஞானத்தாலும் 'எல்லாம் பகவத் செயலே' எனும் உண்மைப் பக்தியான சரணுகதி உணர்வாலும், பாவ புண்ணியங்கள் பற்ருமலிருக்க வழிவகை - சாதனை செய்யவேண்டும். 'நான்' எனும் ஆணவம் விட்டும், சுய-நலமற்றும் செய்யும் கர்மங்களாலும் பாவ — புண்ணியம் ஏற்படாது. ஆகவே, தேகாத்ம புத்தியையும் சுயநலத்-தையும், பாவ புண்ணிய கர்மங்களையும் அறவே விட்-டொழிக்க வேண்டும். இதனுல் சித்த சுத்தியும் - சித்தசுத்தி-யால் குரு தரிசனமும், குரு தரிசனத்தால் ஆத்மஞான சிரவணமும், சிரவணத்தால் மனனமும், மனனத்தால் நிதித்யாசனமும், நிதித்யாசனத்தால் ஞானமும், ஆத்ம ஞானத்தால் முத்தியும் ஏற்பட ஏதுவாகும். மேலும், மண் - பெண் - பொன் ஆகிய ஆசாபாசங்களையும், இச்சை-களையும், துற்சங்க சகவாசங்களையும் விட்டுவிட வேண்டும்.

**4. சகித்தல் (திதீட்சை) :-** நமக்கு ஏற்படும் துன்பங்கள், நஷ்டங்கள் முதலியவற்றைப் பொறுமையுடன் ஏற்று அனுபவிப்பதாகும். வெற்றி-தோல்வி, இன்பம்-துன்பம், லாப - நட்டம், மாஞுபினங்கள் - அவமானங்கள் ஆகிய இவைகள் ஏற்பட்டால் சமமாகப் பாவித்துச் சகித்திருக்க வேண்டும். நமக்குக் கீழ்பட்டவர்கள் செய்யும் தொந்திரவு-களை பொறுத்துக்கொண்டும், அவர்களைத் தண்டிக்கும் ஆற்றலிருந்தும் அன்புடன் மன்னித்தலும் வேண்டும். மேலும், இச்சகித்தல் குணம் இல்லாவிடில் அநேககெடுதிகள் பாவங்கள்-மனச் சஞ்சலங்கள் - ஆன்மீக வாழ்வுக்குத்தடை

ஆகியவைகள் ஏற்படலாமாகையால் மிகப் பொறுமையாக இருப்பது நலமாகும்.

**5. சமாதானம்** :- குருநாதர் கூறும் உபதேசங்களை, சிரவணம் செய்யும்போது, புலன்களின் வழியே மனம் செல்லவிடாமல் உள்ளத்தொருமையுடன் கேட்பதாகும். அவர்கள் கூறும் ஆத்மஞானக் கருத்துக்களைக் கூர்மையுடன் கேட்டு, சந்தேக விபரீதமற அறிவதற்காகப் புலன்களையும்-மனதையும் உலக விடயங்களிலிருந்தும் - குருநாதர் கூறு-வதில் கவனித்து நிறுத்துவதே சமாதானமாகும்.

**6. சிரத்தை** :- பக்தி விசுவாசமாகும். வேதாந்தநூல்கள் கூறும் வார்த்தைகளிலும், குருபகவான் உரைக்கும் வாக்கியங்களிலும் பக்தி சிரத்தையுடன் இருக்கவேண்டும் பரம்பொருளிடத்திலும் ஆன்மாவிடத்திலும், குருமாரிடத்திலும் விசுவாசமாக இருக்கவேண்டும். குருபக்தி மிகவும் அவசியமாகும். குருநாதருடைய உபதேசமே முத்திக்கு மார்க்கமாதலால், குருபகவான் வாக்கை வேத-வாக்காகவும் அவரைத் தெய்வமாகவும் பாவித்துப் பக்தியும் விசுவாசமும் கொண்டிருக்கவேண்டும். குருநாதர் தன்னைப் போலவே தன்னை நம்பியவர்களையும் முக்திக்-கிலக்காகச் செய்வார்

''ஞான நிட்டையை நல்கு நற்றேசிகன்
மான முற்றிடு மானிட னல்லனல்
வான முற்று வளர் கயிலைப்பிரான்
தானெனத் தினம் சாற்றிட லாகுமால்?''

சீடனுடைய பவத் துன்பத்தை பறிக்கத்தக்க சற்குரு தரிசனம் கிடைப்பதரிதினும் அரிதாகும். தற்காலத்தில் சீடனுடைய கைப்பொருள் பறிக்கும் போலிக்குருமார் பல பேருண்டு. ஆதலால் சற்பாத்திரமானதக்க சற்குரு-வினிடத்தும், வேதாந்த ஞான சாஸ்திரங்களிடத்தும்,

விசுவாசம் வைத்து பக்தி சிரத்தையுடன் படித்து, மன—மயக்கங்கள் சந்தேகங்கள் ஆகியவற்றை விலக்கிக்கொள்ள வேண்டும். மேலும் ஆன்மீக வழிபாடு அவசியமாகும்: தன்னைத்தான் அறிந்து தானுன ஆன்மாவே பரம்பொருள் என்பதையும் நன்குணர்ந்து ஆன்மப் பிரீதியுடன் சாதனை புரியவேண்டும்.

**4. முமுட்சுத்துவம் :**

சிலர் தாம் ஞானிகளென்றும், யோகிகளென்றும், மகரிஷிகள் பரம்பரையில் வந்தவர்களென்றும், வாய்ப்பறையடித்துக் கொண்டும், முன்னுள்ள மகான்கள் போல மிகச் சித்துகளும் தங்கள் கைவசமென்று கூறியும், மகா மகிமையுள்ளவர்கள் போல, சடாமகுடதாரியாய்-தியானம் நிஷ்டை செய்பவர்போல் நடித்தும், மிகப் பொறுமையுள்ளவர்போல் வெளிக் காண்பித்தும், முத்தியில் ஆர்வமில்லாமல் உடலுக்கு நலத்தையும் உண்பதில் விருப்பமும், விசித்திர மார்க்கங்களில் ஆர்வமும் கொண்டு, அனுபவமின்றி ஞானவார்த்தைகள் வாசா ஞானமாகப் பேசியும், மூடர்களாகி ஆத்மானந்த அனுபவம் அடையாமல், கெட்டலைகிறுர்களாதலால், நான்காம் சாதனமாகிய முமூட்சுத்துவம் அவசியமாக நாம் அடைந்தவர்களாக இருக்க வேண்டும்.

பிறப்பு—இறப்பு ஆகிய பிறவித்துன்பம் மிகக்கொடிய துக்கமாக இருக்கிறபடியால், இந்த வேதனையால் இனி ஒருகூட இருக்கலாகாதென எண்ணி, பயம் அடைந்தும், இக்கோரமான சம்சார பந்தபயம் - துக்கம் - மோகப்பிரமைகளைப் போக்கடித்து முத்திபெறத் தீவிரமாக முயற்சி செய்யவேண்டும்.

"பிறந்தாருறுவது பெருகிய துன்பம்
பிறவாருறுவது பெரும் பேரின்பம்"

ஆதலால் ஞானவழியைக் காட்டக்கூடிய ஞானசற்குருவை நாடவேண்டும். தலையில் தீப்பற்றியவன் தண்ணீர் தேடி ஓடுவதுபோலும், கரையில் போடப்பட்ட மீன் நீரை நாடித் துள்ளுவதுபோலும் முத்திபெறத் தீவிரதர வைராக்கியத்துடன் துடிதுடிப்புடன் ஓடி நாடி சற்குருவை அடைதல் அவசியமாகும். இந்த முமுட்சுத்துவம் ஒருவனுக்கு ஏற்படாவிட்டால், பிறவித்துன்பம் ஒழியாது. சம்சார பந்தமும் போகாது. ஜனன மரணமும் விடாது.

இந்த நான்கு சாதனமும் உள்ளவனே ஆத்ம-பிரம்ம-விசாரத்துக்கு அதிகாரியாவான். முமுட்சத்துவ சாதனத்-தால் ''சத் எது? அசத் எது?'' என்றறிந்து, அசத்தை நீக்கி, சத்தை அறிய குருதரிசனமேற்படலாகும். குருநாதர் மூலமாக மகாவாக்ய உபதேசம்பெற்றுக் கொண்டுஆத்மசிவ ஐக்கியத்தை விசாரித்து 'அது' வாகத் தக்க அனுபவம் வர மனன நிதித்யாசன- நிஷ்டை-சாதனை புரிய வேண்டும்.

குருவென்கிறவிடத்தில், ஆத்மவிசாரம் என்கிற அக்கினி பிறந்து வேதசாஸ்திரம் எனும் விறகினால் பிரகாசித்து மனிதப்பிறவி என்கிற பாத்திரத்தில் சாந்தகுணமெனும் தண்ணீரில், அறிவு என்கிற அரிசியை களைந்து கலந்து பக்குவமாய் சமைத்து, சமைத்த பூரணமான அன்னத்தைப் புசித்துப் பிறவிப்பிணியான பசித்துன்பம் நீங்கி அத்து விதானந்த திருப்தி (முத்தி) அடையவேண்டும்.

ஆகவே, ஆன்மநேய அன்பர்கள், நான்கு சாதனங்-களையும் கைப்பற்ற இன்றே முயற்சி செய்யுங்கள் சாதன-மின்றியொன்றைச் சாதிப்பாரில்லை. சாதனை உடனே செய்ய ஆரம்பிக்கவும். வெற்றி நமதே! ஓம்.

# மூன்றாவதாகிய தூலப் பிரகரணம்

இரண்டாவது பிரகரணமாகிய, சித்தசுத்திக்கு அடிப்படையான சாதன சதுட்டயத்தினுல், நமது கண்ணுக்குப் புலனுகும் [திருசியம்] நாமரூப பிரபஞ்சங்கள் அனைத்தும் அநித்தியம் — அழியக்கூடியது - எனவும் காண்பனுகிய [திருக்கு] ஆன்ம வடிவான பிரம்மம் நித்தியம் எனவும் நிரூபித்துக்கூறி, அநித்தியத்தை விடுத்து, நித்தியத்தை-முத்தியை - அடைவதற்கு ஏதுவான குணங்களோடு, முத்தியில் ஆர்வத்தையும் வருவித்து, அதன்மேல், நாமரூப -பூத- பௌதிகங்களான பாராதியண்டங்கள் - தேகாதி பிரபஞ்சங்கள் தோற்றிய கற்பனையைத் தெரிவித்து அவற்றை நீக்குவதற்கான தூலப்பிரகரணம் விளக்கப்படுகிறது. கவனியுங்கள்!

நமது கண் முன்பாகக் காணப்படும் — உண்மை போலக் காட்சிதரும், திருசியமான இந்த ‘சகத்’ [தேகாதிப் பிரபஞ்சங்கள்] ஒரு கற்பனைத் தோற்றமேயாகும்! கானல் நீர் போன்றும், கயிற்றில் பாம்பு போன்றும், கிளிஞ்சலில் வெள்ளி போன்றும் தோன்றக்கூடிய கற்பனை [பொய்] போல,

ஆன்மாவான என்னிடத்தில் தேகாதி பிரபஞ்சங்கள், [ஜகத்] கற்பனையாகத் தோன்றுகிறது. பொருளல்லாத நீர், கானலிடத்தில் எப்படியோ? கயிற்றில் பொருளல்லாத பாம்பு எப்படியோ? கிளிஞ்சலில் வெள்ளி போலத் தோற்றும் மயக்கம் [அறியாமை] எப்படியோ, அது போலவே,

ஆன்மாவான - அரூபசைதன்யமான - தன்னிடத்தில்—மூலப்பிரகிருதியாகிய மாயை - காலதத்துவ - மகதத்துவ அகங்காரத்தத்துவங்கள் பஞ்ச தன் மாத்திரை - சூட்சுமம்-தூலம் ஆகிய நாமரூப தோற்றங்கள் தேகாதிபிரபஞ்சங்கள் எனும் கற்பனையான மயக்கம் [அறியாமைப் பிராந்தி] தோன்றிக் கொண்டிருக்கிறது.

இந்தத் தேகாதிப் பிரபஞ்சங்கள்-மூலப்பிரகிருதி எனும் மாயையால் அதாவது அடிப்படைக் கற்பனை-மூலகாரண அறியாமையால்-மெய்த் தோற்றமாகக் காட்சி தருகிறது. எனினும், அவை பொய்யே யாகும். உள்ளபடியே கானல் நீர் எனும் தோற்றமும், கயிற்றில் பாம்பு எனும் காட்சியும், அப்போது மெய்போலத் தோற்றினும் உண்மையில் இல்லையோ? அதுபோலவே,

ஆன்மாவினிடத்திலே, உண்மையிலேயே - தற்போது அறியாமையால் மெய் போலத் தோன்றும், தேகாதிப் பிரபஞ்சங்களெனும் கற்பனைத் தோற்றம் இல்லவே இல்லை. இறந்த-நிகழ்-எதிர்காலங்களான முக்காலங்களிலும் இல்லவே இல்லை. ஆனல் ஏன்? இப்படித் தோற்றுகிறது? மாயை என்னும் அடிப்படை அறியாமையால் தோற்றுகிறது? அது எப்படி? அனாதி காலத்திலே, ஆதியிலே நாமரூப கற்பனைத் தோற்றமான திருசிய தேகாதிபிரபஞ்சங்கள் தோற்றுவதற்கு முன்பிருந்தது எல்லையற்ற பெருவெளியாம் பிரம்ம சொரூபம் ஒன்றேயாம். அது, அதுவேயாகி, அதுவே; ஆன்மாவான நான் ஆ+வும், அதுவே, கற்பனைத் தோற்றமான பாராதியண்ட தேகாதிப் பிரபஞ்சங்களாகவும் தூலமாக விரிந்துள்ளது. அதில், திவலை, நுரை கடலில் உதித்தொடுங்குமாபோல அகிலாண்டமும் உதித்து, அதிலேயே ஒடுங்குகிறது.

"இப்படிப் போல நாமரூபங்களேதுமின்றி
ஒப்பாயிரண்டற் றொன்றாய் உணர்வெளி நிறைவாய்
நிற்கும்
அப்பிரமத்தில் தோன்றும் ஐம்பூத விகாரமெல்லாம்
செப்புகற்பனையினாலே செனித்த வென்றறிந்துகொள்ளே"

— கைவல்யம்

எப்படியெனில், எல்லையற்ற பெருவெளியாம் சச்சிதானந்த பிரம்ம சொரூபத்திலே ஆரோபமாக [கற்பனைத் தோற்றமாக] ஓர் சலனம் ஏற்படலாயின ஆரோபம்-அத்தியாசம்-கற்பனை - எனப்படுவதெல்லாம் ஓர் உண்மை வஸ்துவினிடத்தே - வேறோர் - அதற்கமாறான - ஓர் வஸ்துவைக் காண்பதாகும். இதுவே, அறியாமை-அஞ்ஞானம் எனும் மயக்க நிலையாகும். 'அதிஷ்டானஞ்ஞானம்' எனும் மூலப்பிரகிருதியாகும் இது. [இவ்விடத்தில் இது விவாவதத்திற்கிடமான பெரும் சர்ச்சையாயினும், எதிரில் காணும் உண்மையான தோற்றம் போலுள்ள அநித்தியமான - தேகாதிப் பிரபஞ்சங்களைப் பற்றிய உண்மைகள் ஆய்ந்தறியுங்கால் வேதாந்தக் கருத்துக்களை ஒப்புக்கொள்ள வேண்டிய நிலையில் உள்ளது].

மூலப்பிரகிருதி எனும் மாயை அசைவுறுங்கால் காலத்தத்துவமும் வியாபாகமாகும்போது மகத்தத்துவமும், 'நான்' எனும் உதிப்பேற்படும்போது அகங்காரத்தத்துவமும் ஆயின. மாயை முக்குணங்களாகப் பரிணமித்து; சத்துகுணமாயை,ரஜோகுணமாயை, தமோகுணமாயை எனவும்; தமோகுணமாயை இரு பிரிவாகி, ஆவரணசக்தி-விட்சேப சக்தியாகின. இந்த **அடிப்படை மாயா மயக்க இயல்பினாலேயே, சூக்குமதூல-பஞ்சபூதவிகாரமான, தூலதேகம், தூல உலகமான தேகாதிப்பிரபஞ்சங்கள்-பராதியண்டங்கள் பரிணமித்தன.**

## தூலசரீர தத்துவங்களின் உற்பத்தி :-

தன் மாத்திரை-சூக்கும-பஞ்சபூதங்களின்-பஞ்சீகரணத்தால் தூலபூதங்களான, மண் [பிருத்வி] நீர் [அப்பு] நெருப்பு [தேயு] காற்று [வாயு] வெளி [ஆகாசம்] ஆகியவை தோற்றமாயின. இந்த பொறிபுலன்கள் இருக்கும் இடமான நமது இத்தூல சரீரம் பஞ்சீகிருத-பஞ்சமகா பூதங்களில் ஒன்று சேர்ப்பாலானது. பஞ்சபூதங்களின் கூட்டுறவாலானதே இந்தப்பருவுடல்-மனிதசரீரம் ஆகும். இது 96 தத்துவங்களோடு கூடியது. அவையாவை-எப்படி விரிவடைகின்றன என்பதை தத்துவதரிசினி எனும் இத்துடன் இணைத்துள்ள படத்தில் கண்டு உணர்க.

சீவன், தனதுஆசாபாச எண்ண அலைகளாக கர்மத்துக்கீடாக, இந்தப் பஞ்சபூத விகாரமான தூல உடலை நாடி அடைகிறது. சுகதுக்கங்களுக்கும், ஆசைக்கும் இருப்பிடமாக உள்ளது - இந்தத்தூல உடலாகும். இது அன்னமயகோசம் சாக்கிராவத்தை [விழிப்பு நிலையில்] யில் விவகரிக்கிறது. எனவே,

ஆன்மாகிய தன்னிடத்தில் பஞ்சபூத விகாரக் கற்பனைத் தோற்றமான இந்தத் தூலஉடல்தான் அல்ல! அஃது எப்படியென்றால். இந்த எலும்பு - இறைச்சி - தோல் நரம்பு- மயிர் - எச்சில் - சிறுநீர் - வியர்வை - இரத்தம் - சுக்கிலம் - பசி - தாகம் - தூக்கம் - சோம்பல் - புணர்ச்சி - கிடத்தல் - நடத்தல் - இருத்தல் - ஓடல் - தத்தல்- விருப்பு - வெறுப்பு- பயம் - வெட்கம் - மோகம் ஆகிய இவ்விருபத்தைந்து தத்துவங்களையும் அறிந்த அறிவேதான். தன்னால் அறியப்பட்ட இவைகள் தன்னையறிய மாட்டாது. எனவே, இவைகள் சடம். இந்த இருபத்தைந்தும் ' நான் ' அல்ல. இவைகள் எல்லாம் பஞ்சபூதக் கூட்டுறவு ஆகும். இவைகளினுடைய இணைப்பு - பருத்தல் - இழப்பு ஆகியவைகளால்

வரும் சுக— துக்கம்— ஆன்மாவாகிய நமக்கில்லை. இவைகள் ஏதேனும் போனாலும் நாம் போவதில்லை. எனவே, இந்த இருபத்தைந்து தத்துவங்களையும் சாட்சி மாத்திரமாய் நின்று அறியும் அறிவாம் சுட்டறிவே ஆன்மாவாகிய நான்,

இதுபோலவே, இந்தப் பிருதிவி முதலான [பஞ்சபூத] பஞ்சகமும் - அப்பு - அக்கினி - வாயு — ஆகாசமாகிய ஐம்பூதபஞ்சமும் ஆகிய ஞானேந்திரிய—கர்மேந்திரிய பிராணாதி வாயுக்கள் - அந்த கரணங்கள், விடயங்களாகிய எல்லாத் தத்துவங்களும் கூடித் தூலசரீரம் ஆயின. இது தூலசரீரம் என்றறிந்த அறிவேதான் நான். தன்னால் அறியப்பட்ட இந்த தூலசரீரம் தன்னை அறியமாட்டாது. ஆகவே, இது சடம். இத்தூலசரீரம் தானான ஆன்மா அல்ல: இதனால் வரும் சுக - துக்கங்கள் ஆன்மாவாம் தனக்கில்லை; இச்சரீரம் போனாலும் தான் [ஆன்மா] போகவில்லை. எப்படியெனில்,

ஆசையே பிறவிக்குவித்து; முற்பிறப்பின் ஆசாபாச—கர்மங்களினால் [சஞ்சித கர்மங்களின்] பயனாக இப்பிறவி உண்டாகியது. இப்பிறவியின் ஆசாபாச கர்மங்களினால் [ஆகாமியகர்மங்களினால்]அடுத்த பிறவி ஏற்படலாமையால் முன்னும் இருந்தோம்! இன்றும் இருக்கிறோம்! இனியும் ஆன்மபிரதிபிம்பமான சீவன் இருக்கும் ஆகவே, முக்காலங்களிலும் ஆன்மா இருக்கிறது. இந்தச் சரீரத்துக்கு அப்பாலான - சாட்சி மாத்திரமான- தன்னை, ஆன்மாவான தன்னை, அறிந்தால் தனக்கினிமேல் கர்மபந்தமான சரீரம் வராது, என்கிற ஞானானுபவம் இருக்கிறபடியால், பஞ்சபூதக்கூட்டுறவானது தூலசரீரம்-தூல உலகம் இருந்தாலும் போனாலும், தானான ஆன்மா போகவில்லை. என்றும் நித்தியமாக உள்ளது. ஆகையால், இந்தத் தூலஉடல் நானல்ல! இந்த வியஷ்டி தூல சரீரத்தைக் காட்சியால் அறிகிற அறிவே - சுட்டறிவே - ஆன்மாவாகிய நான்,

"நான் ஒருக்காலும் இல்லாமலிருந்தவனல்ல. நீயும் இராமல் இருந்தவனல்ல. இந்தஅரசர்களும் இல்லாமலிருந்தவர்களல்ல! நாமெல்லாருமே இல்லாமல் போகிறவர்களுமல்ல!" [பகவத் கீதை]

**"கடத்தைக் காண்கிறவன் கடத்துக்கு வேருய் கடமாகாததுபோல, தேகத்தைக் காணுகின்ற தானும் [ஆத்மாவும்] தேகம் அல்ல என்று அறிவாயாக!"** வாக்கிய விருத்தி எனும் சான்றுகளால் உணர்க!

இந்த வியஷ்டி தூலசரீரத்துக்குச் சாட்சியான தானே [ஆத்மாவே] பரமன்முதல், அணுவான புழுவரை சமஷ்டி தூல சரீரங்களிலும் பஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களென்கிற தூலபூதங்களிலும், அந்தராத்மாக இருந்துகொண்டு, சாட்சி மாத்திரமாய் அறிகிறபடியால் அந்த சமஷ்டி தூலசரீரங்களுக்குக் காரணமான தூலபூதங்களும் தானல்ல. தன்னால் காணப்படுகின்ற தேகாதி பிரபஞ்சங்கள் -பாராதி அண்டங்கள்- எல்லாம் பஞ்சபூதக் கூட்டுறவுதான். எனவே, விசுவன், விராட் என்கிற பெயர்களும், அவஸ்தாத திரயங்களும், குணத்திரயங்களும் மனுசத்துவமும் நானல்ல, மேலும்,

பால - குமார - விருத்த - பிணி - மூப்பு - சாக்காடு என்னும் ஷட்பாவ விகாரங்களும், நான் - ஆண் — பெண்- அலி என்னும் லிங்கத்துவமும், நான் - பிரம்ம - க்ஷத்திரிய, வைசிய — சூத்திர என்கிற வர்ணத்துவமும், நான் தமிழன், தெலுங்கன், ஆரியன், ஆங்கிலேயன் எனும் பாஷத்துவமும் நான் காசி கோத்திரம், கௌசிக கோத்திரம், வசிட்ட கோத்திரம் எனும் கோத்திரத்துவமும், நான் பிரம்மச்சாரி, கிரகஸ்த - வானப்பிரத்த - சந்நியாசி என்கிற ஆச்சிரமங்களும், நான் குப்பண கவுண்டன், சுப்பண முதலி என்கிற

குறிசாதிப் பெயர்களும், நான் வெளுப்பு, கருப்பு, சிவப்பு என்கிற நிறபேதங்களும், நான் சாங்கியன், அத்வைதன், தத்துவவாதி எனும் மத நாமங்களும், நான் ஆசிரியன், கம்மாளன், கர்மயோகி, பக்தன், ஞானி, லௌகிகன் எனும் ஆசார நாமங்களும், நான் நாவிதன், வண்ணான், குயவன், தட்டான் எனும் தொழிற்பெயர்களும், நான் அதிகாரி, கூலியாள், முதலாளி, பாட்டாளி, கணக்கன், காரியஸ்தன் என்கிற கிரியாநாமங்களும் ஆகிய எல்லா மனிதப் பெயர்களும் மற்றும்,

பிரம்மா - விஷ்ணு - ருத்திரன் - சூரிய சந்திரகிரகங்கள் தேவ கந்தர்வ - கின்னர- கிம்புரு - அப்ஸர - யக்ஷ- ரக்ஷஸ பூதபிரேதபேய் - வேதாள - சிலா - உலோக போதிகளாகிய தேவப்பெயர்களும்,

பசு - அஸ்வ - சிங்கம்-புலி - பூனை - குரங்காகிய மிருகப் பெயர்களும், கருடன் - கொசுவாகிய பறவைப்பெயர்களும், பாம்பு, பல்லியாகிய ஊர்வன நாமப்பெயர்களும், மீன், ஆமை, சுறுவாகிய நீர்வாழ்வன பெயர்களும், கற்பகம், மா, பலா, பாரிசாதம், புல், பூண்டு ஆகிய தாவரப்பெயர்களும், இமயம், மாமேரு, நீலகிரி முதலான மலைப் பெயர்களும் மேலும்,

சுவர்க்கம், மத்திமம், பாதாளம், நரகம் ஆகிய சதுர்த்தச புவனங்களும் நவகண்டம், சத்ததீபம், காசி, துவாரகா, காஞ்சி, இராமேஸ்வரம் முதலான புண்ணிய க்ஷேத்திரப் பிருதிவிப்பெயர்களும், சத்தசமுத்திரம், கங்கை, யமுனை, கோதாவரி, கிருஷ்ணை, காவேரி, கன்னியாகுமரி முதலனை புண்ணியத்தீர்த்தாதிப் பெயர்களும், வடவாமுகாக்கினி, தாருகபத்தியம், தட்சணாக்கினி, அக்கினி கோத்திரம் முதலான அக்கினிப்பெயர்களும், மலய மாருதம், பிரசண்ட மாருதம், தென்றல் என்னும் வாயுப்

பெயர்களும், அசரீரி, பஞ்சாகாசம், முப்பாழ், வெட்ட-வெளி என்கிற ஆகாசப்பெயர்களும் மற்றும்,

இத்தூல பிரபஞ்சத்தைப் பற்றிச் சொல்லப்பட்ட சத்தசாஸ்திரம், தர்க்கம், மீமாம்சம், யோகம், விஞ்ஞானம் வேதாந்த சாஸ்திரங்களும்-இவை முதலான இந்த வியஷ்டி சமஷ்டி தூலப்பிரபஞ்சமான, பராதியண்டங்கள், தேகாதி பிரபஞ்சங்கள் ஆகிய சர்வமும்,

கானல்நீர், முயற்கொம்பு மலைமகன், கயிற்றில் பாம்பு என்பதுபோல கற்பனைத் தோற்றமாக பொய்யாகிப் போய்விடுவதால், முக்காலத்திலும் ஆன்மாவான தனக்கு இல்லை! இல்லை! இல்லை! எப்படியெனில்,

ஆன்மாவான பிரம்மத்தைத் தவிர மாயை வேறில்லை. மாயைத் தவிர முக்குணங்களில்லை. முக்குணங்களைத் தவிர ஈஸ்வரனில்லை. முக்குண தமசைவிட விட்சேப மெனும் தோற்றமில்லை. விட்சேபத்தைத் தவிர பஞ்சபூதங்களில்லை. பஞ்சபூதத்தில் ஆகாசத்தைத் தவிர வேறு வாயுவில்லை. வாயுவைத்தவிர அக்கினி [நெருப்பு] இல்லை. அக்கினியைத் தவிர அப்பு [நீர்] இல்லை. நீரைத்தவிர மண் [பிருதிவி] இல்லை. இந்த பஞ்சமகா பூதத்தைத் தவிர ஞானேந்திரி-யங்கள், கர்மேந்திரியங்கள், அந்தகரணங்கள், பிராணாதி வாயுக்கள் இல்லை. எனவே,

உறுதியாக, தனக்கெதிராகத் தோன்றும் மாயா—கற்பிதமான திருசிய பாராதியண்ட தேகாதி பிரபஞ்சங்கள் ஆகிய பஞ்சீகரண பஞ்சமகா பூதங்களும் இதன் காரியமான பிரமன் முதல் எறும்பு கடை எண்பத்துநாலாயிரம் சீவராசி-களும், எழுவகைத் தோற்றங்களும், சமஷ்டி, வியஷ்டி, தூல உலக, தூலதேகங்களும், இதனால் ஏற்படும் நாமப்-பெயர்களும், இதைக்குறித்து வருகிற ஆகாசப் பெர்யக்

கூற்றுகளும், கானல் நீர்போல - கயிற்றில் பாம்புபோல- கனவுபோலப் பொய்த்தோற்றமாதலால், முக்காலத்திலும் -எக்காலத்திலும் - ஆன்மாவான தனக்கு இல்லவே இல்லை என்பதை அறிந்து கொள்வாயாக!

இந்தத் தூல தேகத்தினிடத்தில் கற்பனையாகத் தோற்றுகின்ற 'பிராமணன்' என்னும் பிராமணத்துவம் சரீரத்தினுல் ஏற்பட்டதா? என்றுல் சரீரம் சூத்திரர்களுக்கும் இருக்கிறதே? குடுமி, உச்சுக்குடுமி. பூணூல் பிராணத்துவ- மென்னில், அக்குடுமி. பூணூல். ஆசாரி- செட்டி - வைசியர்கள் உட்பட - மண்ணுடை யாருக்குமிருக்கிறதே? அவயங்களால் பிராணத்துவம் சொல்லலாமென்றுல், அவயங்களுக்கு வேறு பெயர் உண்டன்றே? ஆகையால், உயர்வர்ணம் எனும் பிராமணத்வாதி பெயர்கள். பிள்ளைகள் விளையாட்டில் பெயர் வைத்துக் கொண்டாற் போல சொல்லப்பட்டதே- இல்லாமல், நிலையாக முக்காலத்திலும் ஆன்மாவுக்கு யல்லை என்று நம்பி, வர்ண, சாதி, மத, வித்தியாச பேதங்களை அறவே ஒழித்திடுக!

குடை எனும் பொருளில், கம்பு - துணி - கம்பு ஆகிய- வற்றை தனித்தனியே பிரித்தால் குடை என்ற பொருள் எப்படி இல்லையோ, அதுபோல;

கை, கால், முண்டம் முதலான அவயங்களைத் தனித் தனியாகப் பிரித்தால் சரீரம் என்கிற பொருள் எங்கே? என்னே! மாயம்; பஞ்சபூதக் கூட்டுறவால் பரிணமித்த பருவுடலை 'என் உடல் என்றும் உன் உடல் என்றும், விவகரிக்கப் படுவது பேதமை [அறியாமை] அன்றே? பூர்வ ஆசாபாச கர்மங்களின் பயனுக. உடலில் புகுந்த சீவனை, ஆண் என்றும், பெண் என்றும்; யானையென்றும்; பூனை- யென்றும்; குயிலென்றும் கோழியென்றும், பாம்பென்றும்,

பல்லியென்றும், மச்சமென்றும் கூர்மனென்றும் விவகரிக்-கிறோம். இது அறியாமை எனும் லௌகீகப்பார்வை-யல்லாமல் 'ஞானம்' எனும் பரமார்த்திகமான பார்வையி-லில்லை. அறிவே சொரூபமான ஆன்மாவுக்கு, பிரம்மன், வேத ராட்சத மனுஷ்ய நாம ரூபங்களில்லை. நாமரூபங்கள் ஆன்மாவின் சுபாவமுமல்ல! ஆதலால் நான் [ஆத்மா] இப்படிப்பட்டவனென்று சொல்லமுடியும்? எது பிறந்து பெயரிடப்பட்டதோ, நாம ரூபம் உள்ளதோ அது அசத், என்று அறிய வேண்டும். (அசத் என்பது அழியக் கூடியது; ஆன்மா - சத் = அழிவில்லாதது) மனைவிக்குக் கணவன், பிள்ளைக்கு தகப்பன், பெற்றோருக்கு மகன், பகைவனுக்குச் சத்துரு; வேலைக்காரனுக்கு எசமான் என்று பல பெயர்கள் சொல்லப்படும்போது, உன்னை யாரென்று நிச்சயிக்க முடியும்?

நீ, தலையா? வயிறு? கையா? காலா? இந்த அவயங்-களுக்குட்புறம்பான சூக்கும அறிவினாலே, 'உன்னையார்?' என்று விசாரித்துப் பார். தத்துவ நிச்சயம் இப்படியிருக்க இதர அஞ்ஞானத்தால் ஆத்மாவை இப்படிப்பட்டதென்று எப்படிச் சொல்ல முடியும்?

ஆகையால் ஆன்மநேய அன்பர்களே! முத்தியில் ஆர்வ-மிக்க முமுட்சுகளே!! ஆத்ம விசாரம் செய்து சிந்தியுங்கள்!! பஞ்சபூதம்; சத்ததன் மாத்திரையின்றி ஆகாயமில்லை; ஆகாயத்தைத் தவிர வாயு இல்லை. சத்த - ஸ்பரிச - ரூப-தன் மாத்திரை தவிர அக்கினி இல்லை; சத்த - பரிச - ரூப - ரச — கந்த - தன் மாத்திரையின்றி பிருதிவி [மண்] இல்லை; ஆகவே, பஞ்சபூத சேர்க்கையன்றி உடல் என்பது இல்லை; உடல் நான் அல்ல; 'அஹம் நச பூத சங்க' நான் பஞ்சபூதங்களின் [திடபதார்த்தங்களின்] ஒன்று சேர்ப்பல்ல,

—ஆதி சங்கரர்

''ஆகி நின்று அழிதலாலும் அருவருப்புடைய தாலும்
காகம் நாய் கவர்தாலும் கனலிடைப் படுதலாலும்
சோகமே விளைத்தலாலும் சுகதுக்க மறியாத தாலும்
'தேகமே நான் அல்ல' என்றும் 'தேகி நான்' என்றுங்
கண்டேன்
''தோலிரத்தம் நரம்பிறைச்சை சுக்ல மேதை மச்சை
ஒன்றுய்த்
தூலி-கரித்த உடம்பாகும் தொட்டவெவையுந் தன்
வடிவாய்க்
கோலி யடக்கிக் கொழுமிதனைக் கூறு கூறுய் நோக்காது
போலியுணர்வோர் மகிழ்வெய்தும், புனிதமென்னும்
பரமபதம்?
''பாலனுன பருவம் போம்! பன்னு குமரப் பருவம் போம்!
கோலமான் தருணம்போம்! கோலையூன்றிக் குனிந்
தெழுந்து
காலன் மாய்க்க, அனைவர்களும் கல்லென்றழுது பேர்
மாற்றி
ஏலப் பிணம் என்றொரு பெயரிட்டு இடுகாட்டிடுதல் ஒரு
தலையே''
''கருவினின்று மழிந்துபோம்! கண்ட குழந்தையினுங்குமரப்
பருவந்தனிலும் போம்! தருணப் பருவம் தனிலும்
அழிந்துபோம்!
உருவம் நடுங்கும் மூப்பதிலும் ஒடுங்கும்! எந்தக்
காலையிலும்
ஒருவி அழிதல் இயல்பாகும், உலகத்துடலின் வாழ்க்கை
யுமே''
''பஞ்ச பூதங்களும் அழிந்து போம்! பானு திங்கள் உடுக்கள்
போம்!
வஞ்ச அசரர் சுரர்மடிவர்! மாகர் பதம்போம்!
வல்லரக்கர்
துஞ்சுவார்கள்! போகி பதம் துஞ்சும்! பிரமன்
பதந்தானும்
துஞ்சும்! திருமால் பதம் துஞ்சும்! துஞ்சாதென்றே பரம
பதம்''

உலக ஆபாச தேகாத்ம புத்தி ஒழிக்கும் உத்தம அதிகாரிகளே! பிறப்பு — இறப்பு - என்னும் துன்பப் பவக்கடலினில் மூழ்காது பந்தத்தில் உழலும் தன்மையில்லாது. சர்வ துக்க நிவர்த்தியும் பரமானந்தப் பிராப்தியும், முக்திக்கு இலக்காகும் விடுதி சென்மத்தவரால் விசாரித்து அறிந்து உய்வதற்கேதுவான தூலப் பிரகரணத்தை அறிந்துணர குருவருள் நமக்கு எய்துவதாகுக. ஓம்!.

தூலப் பிரகரணம் முற்றிற்று.

சத்தப் பிரகரணம்

# நான்காவது
# சூட்சுமப் பிரகரணம்

மூன்றுவதாகிய முற் பிரகரணத்தில் பஞ்சகிருத பஞ்ச மகா பூதங்களையும், சமஷ்டி, வியஷ்டி ஆத்மகமான சரீரங்களையும் இதன் மேல் கற்பிதமான ஆபாசங்களையுடைய "தூல சரீரம் தான் அல்ல" வென நியதிகளைந்து, இதற்காதாரமான சூட்சும சரீரமும் தான் அல்லவென்று நீக்குதற் பொருட்டு, சூக்கும சரீர உருவகம் இப்பிரகரணத்தில் விளக்கப்படுகிறது.

சூக்கும சரீரம் எனப்படுவது நுண்ணுடல்; அதாவது மனேசங்கற்ப எண்ண அலைகளாகும். அது சங்கற்ப வடிவம் கண்களினுல் கண்டதும், காதுகளினுல் கேட்டதும் ஆகிய விடயங்கள் நமது பெருமூளையில் பதிவாகிறது. அதுவே, எண்ணத்தின் திண்ணமான நினைவலைகள் ஆகிறது. ஏதோர் வொரு நியதிப்படியும் - சூழ்நிலை காரணமாகவும் - ஆசாபாசத்தால், சிறுமூளையின் தூண்டுதலின்படி விவகாரமாய் நிகழ்கின்றன. இந்த எண்ண அலைகளின் விரிவான விளைவே கனவு ஆகும்.

சொப்பனம் எனும் கனவு நிலையில், சங்கற்ப வடிவான நினைவலைகள் விரிந்து விசுவரூப மெடுக்கிறது. அதன் பயனே சூக்கும உலகும் சூக்கும தேகமுமாகும், அந்த நிலையில் [சொப்பனு வத்தையில்] தூல உலகமோ, தூல தேகமோ தோற்றமாவதில்லை. தூல உலகு மறைய, தூல உடல் செயலற்று மறந்து மறைய, சூக்கும உலகும் சூக்கும சரீரமும் கனவு நிலையில் விரிந்து விவகரித்து செயல்படுகிறது. அது கால — தேச - வர்த்தமானங்களுக்கு அப்பாற் பட்டதாக விவரிக்கிறது.

''கனவிடையே நனவில்லை அவ்விரண்டும்
காரணமாம் சுழுத்தி தனிவில்லை''—ரிபுகீதை.

கனவிடையே, பருவுடல் தத்துவங்கள் மறைந்தொழிய பின் எஞ்சி நின்ற கருவி கரணுதிகளாம் தத்துவங்கள் சூக்கும தேகங்களாகச் செயல்படுகின்றன.

## சூக்கும சரீர உற்பத்தி

ஆதியான—அனுதி நித்தியமான அசைவற்ற எல்லையிலா பெரு வெளியாம், அப்பரம்பொருளில் கானல் நீர்போல கற்பனை மயக்கமாக 'மூலப் பிரகிருதி' எனும் மாயை தோன்ற, அது வியாபகமாகியதால், மகத்துவமும், அசைவால் காலத்துவமும், நான் எனும் நினைவால் அகங்காரத்துவமும் ஆகி, சத்துவம், ரஜஸ், தாமசு என்னும் மூன்று குணங்களாகப் பரிணமித்தது. தமோ குணமாயை ஆவரண சக்தி விட்சேப சக்தியினிடத்தில் சூக்கும பஞ்ச பூதங்கள் தோன்றலாயின.

இந்த விட்சேப சக்தியிடமிருந்து, சத்த தன்மாத்திரையான ஆகாசமும் ஆகாசத்தினிடத்தே ஸ்பரிச தன்மாத்திரையான வாயு [காற்றும்]ம் வாயுவினிடத்தே ரூப தன்மாத்திரையான தேயு [நெருப்பு]வும், தேயுவினிடத்தே,

ரச தன் மாத்திரையான அப்பவும் [நீரும்] அப்புவி-னிடத்தே கந்த தன்மாத்திரையான பிருதிவியும் [மண்ணும்] சூக்கும பஞ்ச பூதங்களாகக் கற்பனையாய்த் தோற்றலாயின.

சூக்கும பஞ்ச பூதங்கள் ஒன்றிய நிலையில் சமஷ்டி என்றும், பிரிந்து நின்ற நிலையில் வியஷ்டி என்றும் கூறப்-டும். முக்குணங்களும், சூக்கும பஞ்ச பூதங்களிலே வியா-பித்தபோது, சூக்கும உலக, சூக்கும தேகப் பரிணமம் உண்டாகியது.

சூக்கும பஞ்ச பூதங்களின் சமஷ்டி நிலையில்; சத்துவ குணத்தில், ஆகாசத்தின் அம்சத்தில் உள்ளம்; வாயுவினம்சத்தில் மனம், தேயுவினம்சத்தில் புத்தி, அப்புவினம்சத்தில் சித்தம், பிருதியினம்சத்தில் அகங்காரம், ஆகிய அந்தர-ணங்கள் தோன்றலாயின.

இவ்வைந்து தத்துவங்களில் உள்ளத்தை மனதில் சேர்த்தும், சித்தம் அகங்காரத்தைப் புத்தியிலடக்கியும், இரு தத்துவங்களாகவும் சொல்லப்படும். மற்றும், மனம் - புத்தி - சித்தம் - அகங்காரம் என, நான்காவும் வழங்கும்.

சூக்கும பஞ்ச பூதங்களின் வியஷ்டி நிலையில் சத்துவ குணத்தில் ஆகாசத்தினம்சத்தில் சத்தத்தை அறியக்கூடிய சுரோத்திரம் [காது] வாயுவினம்சத்தில் ஸ்பரிசத்தை அறி-யக்கூடிய துவக்கு [தோல்] தேயுவினம்சத்தில் ரூபத்தை அறியக்கூடிய சட்சு [கண்] அப்புவினம்சத்தில் ரசத்தை அறியக்கூடிய சிங்குவை [நாவு] பிருதிவியினம்சத்தில் கந்தத்தை அறியக்கூடிய ஆக்கிரணம் [மூக்கு].

ஆகிய அறியும் புலன்களாகிய ஞானேந்திரியங்கள் தோன்றலாயின.

**சூக்கும பஞ்ச பூதங்களின் ரஜோகுண சமஷ்டி நிலையில் :**

ஆகாசத்தினம்சத்தில் வியானன், வாயுவினம்சத்தில் பிராணன்; தேயுவினம்சத்தில் அபானன்; அப்புவினம்சத்தில் உதானன்; பிருதிவியினம்சத்தில் சமானன் ஆகிய பிராணாதி வாயுக்கள் தோன்றின. மற்றும் பிராண வாயுவின் கூறுக நாகன் - கூர்மன் - கிரிகரன் - தனஞ்செயன் தேவதத்தன் என்னும் வாயுக்களும் உண்டாயின.

**சூக்கும பஞ்ச பூதங்களின் ரஜோகுண வியஷ்டியில் :**

ஆகாசத்தினம்சத்தில் வசனம் என்னும் தொழி, லியற்றும் வாக்கு [வாய்] வாயுவினம்சத்தில் தானம் என்னும் தொழிலியற்றும் பாணி [கரம்] தேயுவினம்சத்தில் கமனம் என்னும் தொழிலியற்றும் [பாதம்] [கால்] அப்புவினம்சத்தில் விசர்னம் என்னும் தொழிலியற்றும் பாயுரு [குதம்] பிருதிவியினப்சத்தில் ஆனந்தம் என்னும் தொழி– லியற்றும் உபஸ்தம் [குறி] ஆகிய தொழிலியற்றும் கர்மேந்திரியங்கள் உண்டாயின.

உள்ளம் நீங்கலான, அந்தகரணங்கள் நான்கும் சுரோத்திராதி ஞானேந்திரியங்கள் ஐந்தும், அவற்றின் சத்தாதி விடயங்கள் ஐந்தும், வாக்காதி கர்மேந்திரியங்கள் ஐந்தும், பிராணாதி வாயுக்கள் ஐந்தும், ஆகிய இருபத்து நான்கு தத்துவங்கள் கூட சூக்கும சரீரமாயிற்று. மற்றும்

மனம், புத்தி, ஆகிய அந்தகரணங்கள் இரண்டு, ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து பிராணாதி வாயுக்கள் ஐந்து ஆக 17 தத்துவங்கள் சூக்கும சரீரம் எனப்படும்.' [ஆத்ம போதம்]

மேலும், மனமும் ஞானேந்திரியங்களும் கூடியது மனோமய
கோசம்

புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடியது விஞ்ஞான
மயகோசம்

பிராணாதி வாயுக்களும் கர்மேந்திரியங்களும்
கூடியது பிராணமயகோசம்.

இந்த மனோமய - விஞ்ஞானமய - பிராணமயமெனும் மூன்று கோசங்களும் சூக்கும சரீரம் ஆகிறது. இவை சொப்பனாவத்தையில் விவகரிக்குல்போது அதை அபி-மானிக்கும் சீவன் தைசதன் என்னும், சமஷ்டி சூக்கும - உலக - சூக்கும சரீரங்களை அபிமானிக்கும் ஈசுவரர்நாமம் இரணியகர்ப்பன் என்றும் கூறப்படும்.

**ஆன்மநேய தவசீல அன்பர்களே! கவனியுங்கள்!!**

சிதாபாசன் என்னும் சீவன், சொப்பனாவஸ்தை எனும் கனவு நிலையில் விசுத்தி என்னும் கண்ட ஸ்தானத்தில் நின்று, சூக்கும சரீர தத்துவங்களோடு கூடி மனோ சங்கல்யம் எனும் எண்ண அலைகளாலாய சூக்கும உலகில் விவகரிக்கிறது. இம் மனோ கற்பிதங்களே கனவு ஆகும். [ஆன்மா, இவைகளுக்கெல்லாம் சாட்சி மாத்திரமாய் நிற்பதை மறக்காதீர்கள்!]

சாக்கிரம் எனும் விழிப்பு நிலைக்கும், சுழுத்தி எனும் துக்க நிலைக்கும் இடைப்பட்ட நிலையே சொப்பனம் எனும் கனவு நிலையாகும். விழிப்பு நிலையிலிருந்து தூக்க நிலைக்கு செல்லும்போது கனவு ஏற்படுகிறதா அல்லது தூக்க நிலையிலிருந்து விழிப்பு நிலைக்குத் திடீரென வருங்கால கனவு உண்டாக்கப்படுகிறதா? என்பது ஆராய்வுக்குறிய-தாகும்.

முற் கூறியபடி, பெரு மூளையில் பதிவாகிற காட்சிகள், திடீரெனத் தூக்கத்திலிருந்து எழும்போது உண்டாகும்

சந்தர்ப்ப சூல்நிலையில் சிறு மூலையின் தூண்டுதலான மனோ சங்கற்ப எண்ண அலைகளின் எழுச்சியே கனவாகப் பரிணமிக்கிறது. கனவுக்குக் காலமோ நேரமோ - பரிச்சின்னமோ ஏதுமே இல்லை. இமையளவு பொழுதை ஒரு கல்ப காலமாகப் பண்ணும். கல்ப காலத்தை இமைப்பொழுது ஆகக் காட்டும் மகா மாயையாம் வல்லமையுள்ளது இம் மனம். எனவே, மனோ சங்கல்ப ரூபமான கனவும் கால - இட - உருவ - பரிமானமும் வரம்புக்குட்படாத தொன்றாகும். அது போலவே தூக்க நிலையும், துரியம் என்னும் நிஷ்டை நிலையும் மனமிறைந்த நிலையில் கால தேசவர்த்த மானங்களற்றதாக இருக்கிறது. கனவு, மனம் விசிரிம்பித்த நிலையில் - அதாவது, மாயாவிலாசத்தால் கனவுலகைக் கற்பித்து சிருஷ்டிக்கிறது.

இது போலவே, விழிப்பு நிலையில் தூல உலகையும் இம்மனமே தோற்றுவிக்கிறது.

''இறந்து வீணுகக் கழிந்த சரீரங்கள் ஓரளவில்லை. அச் சரீரங்கள் யாவும் தாவுகின்ற மனதினுல் தோன்றும். நீரையன்றி வனமுண்டோ? சகலத்தையும் நடத்துகின்ற மனமே முதன்மையான சரீரமாகும். இத்தூல சரீரம் நீங்கினுலும், இச்சிக்கின்ற சரீரங்களை, விரிக்கின்ற சொப்பனத்தில் தோன்றும் தொழிலைப்போல வேகமாயெடுக்கும்.

சகல சக்தி யுமுடையதாய் முடிவற்றிருக்க ஆன்மாவானது சங்கல்பத்துடன் கூடுகின்ற உருவமே மனம் ஆகும். வலிமையுள்ள சத்தும் அசத்துமாகிய இரண்டின் மத்தியிலு முண்டாகி சொல்லப்பட்ட செயல்களோடும் பழகும் பாவனையும் அந்த மனதின் உருவமே.

நினைப்பின் விசாலமே பந்தமாகும். அதை விடுவதே முத்தியாகும். மனதின் சொந்தமான விளையாட்டினுல் சமீபமும் தூரமாகும். வெகு தூரமும் சமீபமாய் தோற்றும்.

மனதின் வலியினுல் கற்பகாலமொரு விஞடி போலாம்;
விஞடி கற்பகாலமாம்''

ஞான வாசிட்டம்

என ஞான வாசிட்டத்தில் மனதைப்பற்றி விளக்கமாகக் கூறப்பட்டுள்ளதை அறிந்து சிந்திக்கவும்.

உறக்கத்துக்கும் — விழிப்புக்கும் இடைப்பட்ட சிறு பொழுதேதான் கனவைத் தோற்றுவிக்கிறது. மனம் பொறி புலன்கள் மூலமாக இயங்குகிறது. கண் என்னும் புலன். நாம - ரூப - நெட்டை - குட்டை, நிறவேதங்கள் ஆகிய— வற்வையும், காது எனும் புலன், இன்னிசை, கொடுங்- கூச்சல் தொனி, நாதம் ஆகியவற்றையும், மெய் என்னும் புலன். தன்மை - குளிர்ச்சி ஸ்பரிசம் ஆகியவற்றையும், நாவு எனும் புலன், அறுசுவை - இனிய பானம் ஆகிய- வற்றையும், மூக்கு எனும் புலன், நறுமணம் — துர்க்கந்தம் ஆகியவற்றையும், மூளையை மையமாக்க் கொண்டே மன- தின் மூலமாகவே அறிகிறது. மனதின் ஒத்துழைப்பின்றேல் புலன்கள் செயலாற்ற முடியாது. உறக்க சமயத்தில் மனம் ஒத்துழைக்காததால் [அடங்கி நின்றதால்] புலன்கள் செயல்பட முடியாமல் போனது தெரிந்த சங்கதியாகும். மேலும் ஒரு புலன் அறிவதை மற்ருெரு புலன் அறிய முடியாது. உதாரணமாக, கண் எனும் புலன் பார்த்- தாகிறது. ஆனுல், மற்ற புலன்களறியும், கேட்டு - உண்டு உயிர்த்துல் - உற்றறியும் விடயங்களை அந்தக்கண் அறிய முடிகிறதில்லை.

இது போலவே, கர்மேந்திரியங்களாகிய வாக்கு எனும் புலன் வசனிக்கும் தொழிலாற்றுவதும், பாணி எனும் பொறி (கை) இடுதல், ஏற்றல் எனும் செயலாற்றுவதும், பாதம் ஓடல் நடத்தல் ஆகிய தொழிலாற்றுவதும், பாயுறு

என்னும் குதம், மலசலம் கழித்தல் செய்து செயலாற்றுவதும் உபஸ்தம் எனும் குறி இன்பம் நாடும் செயல் புரிவதும், இந்த மனதினுடைய தூண்டுதலினலேயாம் என்பது வெளிப்படையாகும். பிராணுதி வாயுக்களும் மனோ சங்கல்பத்தால் இயங்குவதை நுண்ணறிவால் ஆராயின் தெற்றென் விளங்கும். சூரியகலை; சந்திர கலைகளில் சஞ்சரிக்கும், பிராணன், சுழுமுனை நாடி திறந்து சமகதியில் நடக்கும் போது மனோலயம் ஆவதை அனுபவத்தில் காணலாம். **உறக்கத்தில் சுவாசம் ஓடுவதை நாம் அறியமுடியாமலிருப்பதன் காரணம் மனம் அச்சமயம் செயல்படாமலிருத்தலாலேயாம்,** என்பதைக் கவனிக்கின் தெற்றென உணரலாம்.

மற்றும், இராக - துவேஷ, காமக் குரோதம், லோபம், மோகம், கோபம், மதம், மாச்சரியம், டம்பம், ஈரிஷை, அசூயை, பொறுமை, கர்வம், மமதை ஆகிய துர்க்குணங்களின் பிறப்பிடம் இந்த மனமேயாகும். இது அசுத்தவாசனை.

''மனத்தினு லெண்ணித்தானே வந்ததிவ்வுலகமாகும்
நினைத்திடில் அநேகலோகம் நிற்பதிவ்வறிவிலன்றோ''

—கைவல்யம்

மனம், ரஜோதமோகுணவய மாகுங்கால் அசுத்தவாசனையோடு கூடி, துர்க்குணங்களில் ஈடுபட்டு, பந்தத்துக்கு ஏதுவாகிறது. இம்மனமே சத்துவ குணவயமாகுங்கால் சாந்தம் - அன்பு - பொறுமை - சத்தியம் - தர்மம் நீதி, இரக்கம் ஆகிய நற்குணங்களாகப் 'பரிணமித்து முத்திக்கு ஏதுவாகவும் அமைகிறது. **சூக்கும உலகு, சூக்கும தேகங்களெல்லாம் மனதின் கற்பனைகளாதலால் அவை ஆத்மாவான நானல்ல.**

வசன, தான, கமன, விசர்ச்சக, ஆனந்த மாயமாகிய இவைகளை உண்டுபண்ணுகிற கிரியா சக்தியான கர்மேந்திரங்களைந்தும், உசுவாசரூபமான பிராண வாயுவும், நிசுவாச ரூபமான அபான வாயுவும், முழங்கப்படுகிறதும், தும்முகிறதும், இருமுகிறதும், கண் திறக்கிறதும், மூடுகிறதுமான உதான வாயுவும், புசித்த அன்னத்தை வியாபிக்கப் பண்ணுகிற வியான வாயுவும் இப்படிப்பட்ட கிரியா சக்தியான பிராணுதி வாயுக்களைந்தும் இவைகளை அறிகிற அந்த கரணங்கள் நான்கும், தன்னை அறிய மாட்டாதாகையாலும் பிறவற்றை அறியாவிட்டாலும், தம்மையேனும் தாம் அறியுமோவெனில், அப்படியறிதயாபடியாலும், சடங்களானபடியினுலும், இந்த இருபத்து நான்கு தத்துவங்களும், பஞ்சதன் மாத்திரையினுடைய சமஷ்டி, வியஷ்டி. ராஜச, சாத்வீகத்தினுலும் ஆனவையாதலால், இந்த இருபத்து நான்கு தத்துவங்களினுடைய ஹானி விருத்திகளினுல், வருகிற சுக துக்கம் தனக்கில்லை. இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் தானுனல் - இந்த இருபத்து நான்கு தத்துவங்கள் போனுலும் தான் போகவில்லை.

எப்படிப் போகவில்லையென்ருல் நித்திரையில் இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் இல்லாமற் போனுலும் தான் காரணுத் மகமாய் இருந்து கொண்டு, திரும்பவும் விருத்தி வந்து விழித்த உடன் இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் இல்லாமல் சுகமாயிருந்தே னென்று தானிருந்த அனுபவம் சொல்லுகிருன். ஆனபடியினுலும் இந்த இருபத்துநான்கு தத்துவங்களும் தானல்ல இந்தஇருபத்து நான்கு தத்துவங்களும் அறிந்த ஞானமே க்ஷேத்திரம் இந்த இருபத்து நான்கு தத்துவங்களையும் க்ஷேத்திரக்ஞன், இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் அனுத்மா, இந்த இருபத்துநான்கு தத்துவங்களையும் அறிந்த அறிவே ஆத்மா,

இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் பிரகிருதி, இந்த இருபத்துநான்கு தத்துவங்களையும் அறிந்த அறிவே புருஷன் ஆதலால், சொப்பனுவஸ்தை [கனவு] நிலையில் பிராண மயகோசம், மனோமயகோசம்- விஞ்ஞானமயகோசம் ஆகிய மூன்று கோசங்களும் சூக்கும சரீரமும் கற்பனையாகத் தோற்றுகிறது. கானல் நீர் போலும், கயிற்றில் பாம்பு போலும், கிளிஞ்சலில் வெள்ளிபோலும், பொய்த்தோற்ற மாக விளங்கும் கனவுலகமும், கனவுடல்களும் ஆகியவை கள் ஆன்மாவாகிய நானல்ல. அதை சாட்சிமாத்திரமாக- காணும் அதிஷ்டான பிரம்மாகிய ஆன்மாவே நான்!

கர்மஞானேந்திரியங்கள், பிராணுதி வாயுக்கள், அந்த கரணங்கள் தன்மாத்திரை பஞ்சபூதத்தைத்தவிர வேறில்லை: விட்சேபசக்தி, தமோகுண மாயைத் தவிரவேறில்லை; தமோ குணமாயை பரம்பொருளான பிரம்பத்தை தவிரவேறில்லை; பிரம்மத்தைத்தவிர ஆன்மா வேறல்ல; 'அயம் ஆத்ம பிரம்மம்;' எனவே,

சூக்கும பூதங்கள், சூக்கும தேகங்கள், சூக்கும உலகங்- கள், அதன் காரியங்கள் எல்லாம் கானல் போன்ற கற்பனை; அநித்தியம்; ஆன்மா நித்தியம்' உன்னை நீ அறி;

''சாக்கிரம் சொப்பனங்களிரண்டையுந் தாண்டிப் போனுல்
சூக்கும சுழுத்தி வந்து தொல்லருளாகி மூடும்
ஆக்கமும் அழிவுமில்லா அறிவினுல் அதையுந்தள்ளிப்
போக்கொடு வரவுமில்லாப் பூரணப் பொருளாவாயே''

''தூலவுடல் சூக்கும தேகத்தில் இல்லை
தூலவுடல் சூக்குமவுடலவ் விரண்டும்
ஆலயமாங் காரண தேகத்தில் இல்லை!
அவை மூன்றுந் துரியத்திலில்லவே இல்லை!

கோலமுறும் தேகமெலாம் இலாததாலும்
கூறுபடர்ச்சின்மா த்ராசொரூப மொன்றே
காலமொரு மூன்றில் மேலிருப்பதாலும்
களங்கமிலாச் சின்மாத்ர சொரூபமே நான்''
— ரிபு கீதை

''சத்த முதலைந்தினையும் பொறிகளறியும்
பொறிகள் தம்மைத் தானாய்
ஒத்தகரணம் அறியும் கரணத்தையறியுமுயிர், உயிரைத் தானும்
நித்தியமாயிருந்தறியும் சாட்ரயகண்டாகார நீங்கி மேலாய்
இத்தனையும் பகுத்தறியும் அறிவுவடிவாயிருப்பதியல்ப தாமே

''விடயமறிந்திடும் பொறிகள் விடயமாமோ?
மிக்க பொறியறிகரணம் பொறிகளாகுமோ?
அடையவறி சீவன் அந்தகரணமாமோ?
அதனையறிந்திடுஞ் சாட்சி சீவனாகுமோ?
தடையற வொன்றினையறியுமொன்று மேலாம்!
சாட்சி யொன்றாலயறித்தகுமோ? தானாய்
இடையற நின்றிலங்குமெனில் அதனைக்காண்டற்
கேதுண்டாம் அதுவாகியிருந்து காணே.''

பிறப்பு இறப்பு எனும் பெருந்துன்பம் பெருக்கிற்கு ஈடாகும். பந்தத்தில் உழலும் சென்மத்தவராகாது, சர்வ துக்க நிவர்த்தியும் பரமானந்தப் பிராப்தியும் ஆகிய முத்திக்கு இலக்காகும். விடுதி சென்மத்தவரால் சிரவணம் செய்யத்தக்கன.சூக்கும பிரகரணத்தைக் கேட்டுணர, சற்குரு ஓம் பிரகாச நாதர் அவர்கள் நல்ஆசி நம்மவர்கள் மீது பொழிவதாகுக குருவருள் பெற்றுய்வோமாக! ஓம்!

சூட்சுமப் பிரகணம் சம்பூரணம்

# காரணப் பிரகரணம்

முந்தைய பிரகரணத்தில் சூக்கும சரீரத்தையும் அதற்காதாரமான பஞ்ச தன்மாத்திரைகளேயும் நியதி களேந்து அவைகளுக்கு அடிப்படையாகவுள்ள அவித்தையை [அஞ்ஞானத்தை] நியதிகளே தற்பொருட்டு அவித்தை மயமான காரண சரீரத்தை விளக்கிவைக்கப்படுகிறது. சத்-சத்-ஆனந்த வடிவமான தன்னிடத்தில் கற்பனையாகத் தோற்றும் காரண சரீரம் யாதென விளக்குவோம்.

இந்தக்காரண சரீரத்துக்கு அகங்காரத்துவம்-அவித்தை-தமசு-தூல சூக்கும சரீரத்துக்குக் காரணம். ஒன்றுந் தோன்ருமை, பிராந்தி மயக்கம் என்று இடுகுறிப் பெயரால் குறிக்கப்படுகிறது. பஞ்சதன்மாத்திரைகளேத் தனித்தனியாக விவகரித்துப் பார்க்கும்போது முயற்கொம்பு மலடிமகள்—ஆகாசத்தாமரை-போல ஒன்றுமில்லாமல் போய்கிறபடியால் இது அம்மாயா கற்பிதமாகும். அனுதியாகவும், இன்ன தென்று உரைக்கப்படக் கூடாமையாலும், [அநிவர்வாச்சிய-மாகவும்] இருக்கிறபடியால் காரணஉபாதி என்று சொல்லப்-படுகிறது. தூல-சூக்கும-காரணமாகிய மூன்று உபாதி-களுக்கும் அன்னியமாக ஆன்மாவை அறிய வேண்டும்.

எல்லேயற்ற அகண்ட பெருவெளியாம் பிரம்ம சொரூபத்தில் ஆரோபமாக [கற்பனே] த்தோற்றிய மூலப்-பிரகிருதி என்னும் மாயை முக்குணங்களாகப்பரிணமித்ததில் இராசோ குணமாயையின் பிரதிபலித்த சித்தசாயா பிரதி பிம்பமான - சிதாபாசன் எனும் சீவனே காரண சரீரமாகும். இதுவே காரணசரீரம், ஆனந்த மயகோசம்-சுழுத்தியவஸ்த-யாகும். இதைத் தன்னேத்தான் அறியும் சுட்டறிவால் தெளிந்து ஒழித்து விடவேண்டும்.

தன்னிடத்தில் கற்பனையாகத் தோற்றுகிற இந்தகாரண சரீரம் தானல்ல, எப்படியெனில்,

தன்னால் அறியப்பட்ட இந்தக்காரண சரீரம் தானாக ஆன்மாவை அறியமுடியாது. ஆதலால் சடமான காரண சரீரம்தானல்ல: இந்தக் காரண சரீரத்தினுடைய அழிவினாலும் உற்பத்தியாலும் வரும் சுகதுக்கம் ஆன்மாவான தனக்கல்ல. இந்தக்காரண சரீரமே தானானால, இக்காரண சரீரம் போனால்தான் [ஆன்மா] போகவேண்டும். இது போனாலும் தான் போகவில்லை எப்படியெனில்,

நிஷ்டை [துரியாவத்தை]யில் 'காரணசரீரம் போனாலும் திரும்பவும் விழிப்பு நிலையில் எண்ண அலைகள் எழுந்த பின்பு 'சுகமாயிருந்தேன்' என்பது அனுபவமாகிறது. ஆதலால் இத்தக்காரணசரீரம் தானல்ல: இந்தக் காரணசரீரத்துக்கு சாட்சியாக இருந்து அறிகின்ற (ஞானமே-சுட்டறிவே' தரோன ஆன்மா. இதுவே துவம்பத இலட்சியார்த்தமாகிய நான்.

''காரண சரீரம்தன்னைக் களைவதெவ்வாறென்றேதில்
ஆரணம் பொய்சொல்லாதே! அதனை பொருளகத்—
திண்ணிப்
பூரணமாகு மென்மேல் புவனங்கள் தோற்றமென்ற
தாரணை வந்தாகில் தரித்திடும் தானு மங்கே''
— கைவல்யம்.

மேலும் இந்தக் காரணசரீரத்திற்குச் சாட்சியாய் சமஷ்டி காரண சரீரங்களிலேயும் அப்பால்பட்டதாயிருந்து அறிகிற ஞானமேதான். எனவே, தன்னால் அறியப்பட்ட இந்த சமஷ்டி காரண ச ரீ ர மு ம் தன்னை அறிய மாட்டாது. ஆகையால் சடம், இந்த சமஷ்டி காரணசரீரம் தானல்ல: இப்படியாக,

தனக்கெதிராகத் தோற்றுகிற, சமஷ்டி-வியஷ்டி காரண சரீரத்தின் பேரில் கற்பனையாகத் தோற்றுகின்ற-பிரக்ஞன்-பரமார்த்திகன்-அவச்சுன்னன்-என்கிற அபிமானத்துவரும், சுழுத்தியவஸ்தையும், ஆனந்த மயகோசமும், தாமச-குணமும், ஆத்மானந்தசோகமும் ஞானசக்தியும், ருத்திர-மூர்த்தியும், இருதயஸ்தானமும், மகாமாத்திரையும் கூடிய அவித்தைமயமான காரண சரீரம் தானாகயிருக்க முடியாது. மற்றும்,

நான் கர்த்தா-நான் போக்தா-நான் மகிழ்பவன்-நான் சாத்வீகன்-நான் அஞ்ஞானி. நான் முட்டாள்-நான் யோகி-நான் பித்தன்-நான் பாவி-நான் கெட்டுப்போனவன்-என்கிற மயக்க அறியாமையும், மேலும்,

இந்தக் காரண சரீரத்தைக் குறித்து சொல்லப்பட்ட, ஒன்றுதல், பிரிந்து நிற்றல் சத்த சாஸ்திரம் ஆகிய கற்பனை-களும், இன்னும் இவை முதலான இக்காரண உலகின் கண் தோற்றுகிற எல்லாக் கற்பனைகளும், கானல்நீர்போலும் கயிற்றில் பாம்பு போலும், கிளிஞ்சலில் வெள்ளி போலும், முக்காலங்களிலும் ஆன்மாவான தனக்கில்லை என்கிற துணிவும் அனுபவமும் ஏற்படவேண்டும். ஏன் தனக்கில்லை எனில்,

மண்ணால் உண்டான பானையின் உருவம் கற்பனை பானையைத்தவிர வேறில்லை. பானை மறையுங்கால், பானை என்ற கற்பனை போய், மண்ணே ஆகிறது. பானை காரியம். மண் காரணம் காரணமான மண்ணே எஞ்சி நிற்கிறது. ஆகையால்,

பிரபஞ்சத்தை [ஜகத்தை] க்குறித்து வந்த பிரபஞ்ச-மென்னும் கற்பனைத் தோற்றமும், பிரபஞ்சத்தைத் தவிர வேறில்லை: பிரபஞ்சம் மறையுங்காலை, பிரபஞ்சமென்னும்

கற்பனை போய் அதற்காதாரமான ஆன்ம சொரூபம் ஆகிறது. பிரபஞ்சம் காரியம்; ஆன்மா காரணமாதலால் காரணமான ஆன்மாவே எஞ்சி நிற்கிறது. ஆகையால்,

ஆன்மாவான, தன்னிடத்தில் கற்பனையாகத் தோன்றுகின்ற மயக்கம் தரும் பொய்ப் பொருள்களும் இதுபற்றி எழுந்த கற்பனைகளும் கனவு போல பொய்யாகி முக்காலங்களிலும் தன்னிடத்தில் இல்லவேயில்லை. தேகம்-இந்திரியம்-மனம் - புத்தி - பிரகிருதி ஆகிய இவைகளுக்கு அப்பாற்பட்டதாயும், அவைகளின் அசைவு [செயல்] களுக்குச் சாட்சியாயும் அரசனைப் போல் எதிலும் எங்கும் சம்மதமில்லாது தாக்கற்றிருக்கின்ற ஆன்மாவை அறியவும்.

# ஆறாவது பிரகரணம்
# மகாகாரணப்பிரகரணம்

முற்பிரகரணத்தில் அவித்யா [அஞ்ஞான] மயமான காரண சரீரத்தை நியதி களைந்து, அதற்காதாரமான வித்தை [ஞானம்]யை நியதிகளையும் பொருட்டு, அதன் மயமான மகாகாரண சரீரசொரூபத்தை விளக்கி வைக்கப்படுகிறது. சத் - சித் ஆனந்தவடிவான தன்னிடத்தில் பொய்த் தோற்றமாயிருக்கும் மகாகாரண சரீரம் யாதெனை விளக்கிக் கூறலாம்.

தமோகுண முதன்மையான அகங்காரதத்துவமென்கிற காரண சரீரம் போன பின்பு, சுத்த சத்துவ குணப்பிரதான-மான பிரக்யக் ஆன்மாவுக்கு [சுட்டறிவுக்கே] மகா காரண சரீரம் என்று பெயர். இந்த அடிப்படை ஆதாரமான மகா காரண சரீரத்துக்கே, சித்து - சைதன்யம் - போதம் — கூடஸ்தன் - சுட்டறிவு - சாட்சி—திருக்கு - திரிசியானுவிதம்

என்றும் இன்னும் இவை முதலான இடுகுறிப்பெயர்களும் கற்பிக்கப்படுகிறது. இதுவே துவம்பத லட்சியார்த்தமாகும். மாயா உபாதிகளையும், சுகத்துக்கு காரணமாயும் சர்வஞ்ஞத்துவம் முதலான இலட்சணங்களோடு கூடி-யவனும் - பரோக்ஷனும் - சபலனும் இருக்கின்ற ஈஸ்வரனே தத்பதார்த்தம் ஆகும். இதுவே, சத்துவகுண மாயையில் பிரதிபலித்த சித்சாயா பிரதிபிம்பமான ஈசுவர காரண சரீரமாகும்.

மற்றும், இப்பிரத்யக் ஆன்மாவான சாக்ஷியே சாட்சிய-மான பிரபஞ்சமாகத் தோற்றுகிற படியால், பாராதி-யண்டமாகத் தோற்றுகின்ற மகாகாரண சரீரமாகிய பிரத்யேக் ஆத்மாவுக்கே அகண்டாகாரவிருத்தி - ஆனந்த விருத்தி - சம்பிரக்ஞாதசமாதி - ஓங்காரம் - பிரணவம் - சிற்சக்தி - பிரதம பாசம் - அசங்கன் - சச்சிதானந்த - சொற்பிரகாச - நித்த - சுத்த - நின்மல - நிராகார - நிர்ச்-சங்க - நிர்விகற்ப - நிராம்பல - அகண்டானந்த - பரி-பூரணனந்த - நித்யானந்த - என்றும் சம்பிரஞ்ஞாதசமாதி-ஸ்வரூப பாவமென்ற சவிகற்பசமாதி என்றும் இன்னும் இவை முதலான மகத்தான காரணப் பெயர்கள் கற்பிக்கப் படுகின்றன. எனவே,

ஞான வாசிட்ட ஞான நூலில் கூறியபடி "சிதாகாச_ரூபமாயும் - சர்வ சொரூபமாயும் - அகண்டாகாரமாயும்-நிரந்தரமாயும் ஏகமாயும் இருக்கின்ற பிரம்மத்தை பாவனை பண்ணு"

இந்தப்படியான வியஷ்டி சமஷ்டி அகண்டாகார—விருத்திகளுடைய காரண இடுகுறிப் பெயர்களோடு கூடி-யிருக்கிறதே மூலப்பிரகிருதி (மாயை) எனும் மகா காரண சரீரம் - தன்னிடத்தில் கற்பனையாகத் தோற்றுகிற இந்த மாயையாகிய மகாகாரண சரீரம் தானல்ல எப்படியெனில்,

தானான தன் மயமாகும் முடிவான நிலையில், இந்த மகாகாரண சரீரம் இல்லாமற் போனால், தான் என்கிற தற்போதமற்று தன்மயமாகிறபோது இந்த மகா காரண சரீரம் நழுவி விடுவதால் மகாகாரண சரீரமும் தானல்ல.

இந்த மகா காரண சரீரத்தின் பேரில் கற்பனையாகத் தோற்றுகின்ற பெயர்கள் சர்வஞ்ஞன் என்றும் திரிலோக-வேதி என்றும் தானே சர்வமும் என்றும் தன்னுடைய கற்பனையே பாராதியண்டங்களென்றும் தன்னிடத்தில் தானே சகம் - ஆக்கல் — காத்தல் - அழித்தல் என்றும் தானே சுகத்துக்குக் காரணமென்றும், தானே சர்வசக்தி வாய்ந்தவனென்றும், தானே சர்வத்திலும் வியாபித்துக் கலந்தவனென்றும், தானே சுவர்க்க - மத்திய - பாதாள பிரம்மலோக சகல லோகத்திலும் இருக்கின்ற பேர்—களுடைய விருத்தாந்தங்களெல்லாம் தெரிந்தவன் என்றும் ஆகிய எல்லாக் கற்பனைகளும், மற்றும்:

தானே துரியாவத்தை - ஆதாரமான இடம் - ஆனந்த போகம் என்றும், இந்த மகா காரண சரீரத்தைப்பற்றி எழுந்த மாயாவாத - சத்தசாஸ்திரம் - தர்க சாஸ்திரம்-மீமாம்ச சாஸ்திரம் - யோக சாஸ்திரம் - வேதாந்த சாஸ்திரம் ஆகிய இவை முதலான சாஸ்திரங்களும், இந்த சாஸ்திரங்களுக்கு ஏதுவான சூக்குமமை- பைசந்தி-மத்திமை- வைகரி வாக்குகள்- முதலான சகல கற்பனைகளும் கானல்நீர் போலும், முயற்கொம்பு போலும் ககன தாமரை போலும் முக்காலங்களிலும் தனக்கு ஆன்மாவுக்கு - இல்லை.

இப்படித் தன்னிடத்தில் கற்பனையாகத் தோற்றுகிற இந்த சாட்சித்துவம் என்கிற மகா காரண சரீரம் சாட்சிய-மெனப்பட்ட பிரபஞ்சத்தைக் குறித்து வந்ததானபடியால்

இந்த சாட்சியாயிருக்கப்பட்ட பாராதியண்டங்களான பிரபஞ்சம் முக்காலங்களிலும் தன்னிடத்திலலை. எனவே,

இந்தச் சான்றுகளான ஆ தா ர த் தை க் கொண்டு சாட்சித்துவம் என்கிற காரண சரீரமும், இதனிடத்தில் கற்பனையாசத் தோற்றுகிற சர்வத்துவாதி பொய்ப் புகார் களும், இதைக் குறித்தெழுந்த கற்பனைகளும் கயிற்றில் பாம்புபோலும், மலடி மகன்போலும், கிளிஞ்சலில் வெள்ளி போலும், முக் காலங்களிலும் தனக்கில்லை. ஆகையால்,

இந்த சாட்சி — சாட்சியத்திற்கப்பாற்பட்டதாயும், நினைப்பு மறப்பு இல்லாததாயும், தியானம், தியானேய-மற்றும், தானான தன்மயமாகும் பேரின்ப வடிவே, குரு-வாக்கியத்தால் 'நான்' என்றறிந்து நின்றதே மூலப்பிரகிருதிக்கு அப்பால்பட்ட தன்னுடைய தற்சொருபமாகும். இதற்கு உதாரணம் : தசபுமான் திருஷ்டாந்தம்.

ஆறுகடந்து பத்துப்பேர் போக, ஒருவன் மற்ற ஒன்பது பேர்களையும் எண்ணி, தன்னை எண்ணாமல், பத்தாமன் தானாக இருந்தும்; தன்னைப் பத்தாமன் என்று அறியாமல் போனதே அடிப்படை அறியாமை ஆகிய மூலப்பிரகிருதி வழிப்போக்கனின் வாக்கியத்தால் பத்தாமன் தான் என்று அறிந்து நின்றதே மூலப்பிரகிருதிக்கு (அறியாமைக்கு) அப்பாலான தன்னுடைய [ஆன்மா] சொரூபமாகும்.

''இது நினைக்கறியும் வண்ணம் இப்படியொரு திருஷ்டாந்தப் புதுமையாம் கதை கேள் பத்துப் புருடரோராற்றை நீந்தி உதக தீரத்திலேறி ஒருவன் ஒனபது பேரெண்ணி யதனுடன் தசமன்தான் என்றறியாமல் மயங்கி நின்றான்''

''அறியாத மயல் அஞ்ஞானம் அவனில்லை காணேமென்றல்
பிரியா ஆவரணமாகும். பிழை கொண்டழல் விட்சேசம்
நெறியாளன் தசமனுண்டு, நிற்கின்றனென்ற சொல்லைக்
குறியாக நெஞ்சிற்றனே குறிக்கொளல் பரோட்சஞானம்''

''புண்ணிய பதி தன் பின்பு புருடரொன்பதின்பர் தம்மை
எண்ணும் நீ தசமனவை என்னவே தன்னைக் காண்டல்
கண்ணினல் கண்ட ஞானம் கரைதல் போனது நோய் போதல்
திண்ணிய மனதில் ஐயம் தெளிதல் ஆனந்தமாமே''
— கைவல்யம்

ஆத்ம ஞானம் சுலபம். ஆனல் பளுவுமாகும். எப்படி சுலபமெனில், 'தான்' என்றறிந்த அறிவை தானெனவ அனுபவத்தில் உணர்தல் சுலபமாகும். அது 'தான்' என்ற மறதியால் அறியாமல் மயங்கி இருத்தல் பளுவாகும்.

"அறிந்தேன் என்ற நினைப்பும் அறியேன் என்கிற மறைப்பும் இவ்விரண்டுமில்லாமல், உண்மை வடிவாயிருக்கின்றதே நிரதிசயானந்தம்" என்று அதூத கீதையில், தாத்ரேய யோகேஷ்வரர் அருளியிருக்கிறார்.. சாமவேதம் - சாந்தோ-பக்கிய உபநிஷத்தில் குருசீடசம்வாதமாக உணர்த்தி-யிருப்பதே சான்றகும்.

குரு :- சீடனே! ஆலம்பழத்தைக் கொண்டுவா?

சீடன் :- சுவாமி! இதோ கொண்டுவந்தேன்.

குரு :- அதைப் பிள....

சீடன் :- பிளந்தேன்....

குரு :- அதிலென்ன கண்டாய்?

சீடன் :- ஒன்றுங் காணவில்லை. குருதேவா!

குருு :- நன்கு கவனி....

சீடன் :- பரமாணுக்களைக் கண்டேன்!

குரு :- அப்பரமாணுக்களின் ஒன்றைப் பிள!

சீடன் :- பிளந்தேன் சுவாமி!....

குரு :- அதிலென்ன கண்டேன்?

சீடன் :- அதிலொன்றும் காணவில்லை.. குருதேவா!

குரு :- அன்பான சீடனே! இப்படிப்பட்ட அணுவான விதையில் இலை - கிளை - அடிமரம் - விழுது — மலர்கள் - காய்கள் -கனிகள் முதலான விதாரங்-களோடுத் தோற்றும் ஆலமரமானது எப்படி அடங்கியிருக்கிறதோ! அப்படியே உனனிடத்தில் நாமரூப, தோற்றமான பிரபஞ்சமும் அடங்கியிருக்கிறது.

''அரவு முதல் பலவிதமாய்த் தோற்றினும்
அதிஷ்டான ரச்சு வினையாய்ந்தறிந்தால்
மருள் வடிவாம் அரவு முதலனைத்து மந்த
மாசற்ற விரச்சுவடி வாவதே போல்
விரவு சக முதலியவாய்த் தோன்றினாலும்
விமல வதிட்டான பரப்பிரம்மந் தன்னை
அருமையுடன் நன்றாக ஆய்ந்தறிந்தால்
அவையாவும் அகண்ட பரப்பிரம்ம மாமே''

— ரிபு கீதை

# ஏழாவது பிரகரணம்
# நிசானந்தானுபூதிப் பிரகரணம்

முந்திய பிரகரணத்தில் வித்யாரூபமான மகா காரண சரீரத்தை நியதி களைந்து, அதற்காதாரமான சத் - சித்- ஆனந்த ஒருமையின் கண்ணுள்ள பேரின்பம் அனுபவமாகும் பொருட்டு, அதற்கு அங்கமான நிசாநதானுபூதிப் பிரகரணம் விளக்கி வைக்கப்படுகிறது.

''ஒரு குணமுமில்லாதவனாய், ஒரு கர்மமுமில்லா- தவனாய், ஒரு களங்கமுமில்லாதவனாய், ஒரு விகாரமும் இல்லாதவனாய், ஒருவருமுமில்லாதவனாய், மலரகிதனாய், நித்திய முத்தனாய் இலகுகிறேன்'' — உபநிஷத்து

மூலப்பிரகிருதிக்கப்பாற்பட்ட தன்னுடைய [ஆன்மா] சொரூபத்தின் வர்ணநீய [அலங்காரமாகக் கூறப்படுகின்ற] பெயர்கள் விஞ்ஞேதமானது.

சத்தே சுயமாகத் தோன்றியபடியால் சித் ஆயிற்று. சித்தே சுயமாக இருக்கிறபடியால் சித் ஆயிற்று. இதற்- கன்னியமாக இரண்டாம் பொருளின்மையால் ஆனந்த- மாயிற்று. ஆகவே, சச்சிதானந்த வடிவாய், அகண்டானந்த வடிவாய், மற்றும், நீரு - ரூபமற்ற, நிருபத்திரவு-துயரற்ற, நின்மல, மாசற்ற; நிரவயவ - உறுப்புகளற்ற; நிரந்தர- அழிவற்ற; நித்திய - என்றுமுள்ள, நிராகர - புகிப்பற்ற, நிஷ்கர்ம - தொழிலற்ற, நிர்சங்க - சேர்க்கையற்ற, நிர்- விகார - குரூரமற்ற வடிவமாகவும் மற்றும்,

நிர்குண - குணமற்ற, நிஷ்கிரிய - செயலற்ற, நிர்-விகல்ப - பேதமற்ற, நிரஞ்சன - இருளற்ற, நிர்லட்சிய-குறியற்ற, நிராலம்ப - அலைவற்ற நிரதிசயானந்த வடிவ-மாகவும், இன்னும்

நீரிச - இருப்பற்ற, நிர்வசன – உரையற்ற, நிர்ச்சித்ய-ஞானமற்ற. நிர்ப்பின்ன– மாறுதலற்ற, நிச்சல—அசைவற்ற நிர்ச்சேஷ - மீதியற்ற. நிர்ச்சித்த - ஒலியற்ற, நிர்க்சீவ-உயிரற்ற - நிச்சாலானந்த வடிவமாகவும், இன்னும் இவை முதலாகச் சொல்லப்பட்ட அலங்கிருதப் பெயர்களால் வர்ணிக்கப்படுகிறது ஆன்ம சொரூபம்.

இந்த ஆன்ம சொரூபத்தினுடைய அலங்கார எதிர்-மாற்றக் கற்பனைப் பெயர்கள் உலக வழக்கை யொப்ப வந்ததேயல்லாமல் உண்மையில் அப்பெயர்கள் கிடையாது. இவையெல்லாம் விளக்கு நாமங்கள், உதாரணம்,

அநூதம் - சடம் - துக்கம் இதற்கு எதிர்மறை சத்து-சித்து - ஆனந்தம்; பிரபஞ்சத்தை அனுர்த - சடம் — துக்க மெனக் கண்டு அதை நீக்கும் பொருட்டு குறித்த எதிர் மறைப் பெயர்களாகும்.

"சச்சிதானந்த சொரூபமான ஆன்மா என்னும் அமிர்த சாகரத்தில்
நித்திய சசுவதமான முத்தியிருக்கிறது" -ஆதிசங்கரர்

ஆத்மாவின் விளக்கு நாமஎதிர் பெயர்கள்:

அசத் - ஜடம் - துக்கம்: சத் — சித் - ஆனந்தம்

சகுணம் - நிர்க்குணம். ஆவரணம் - நிராவரணம்.

''அசலம் நிரஞ்சன மமிர்த மேயம் விமலம் வசனுதிதம்
அசடம் அனுமயம் அசங்கம் அதுவும் நிரந்தரம் அநனு
நிருப கண்டம்
அசமனந்தம் அவினுசி நிர்க்குண நிஷ்கள நிரவியவயனுதி
அசரீர மவிகார மத்துவிதமெனவிளக்கு மநேகமுண்டே?',
—கைவல்யம்

ஓர் நாமம், ஒருருவம், ஒன்றுமில்லார்க்காயிரம் திருநாமம் கூறப்படுவதாயினும், இவையெல்லாம் கற்பனைப் பெயர்களாகத் தோற்றியதேயல்லாமல், சுதாவாக இப்பெயர்கள், கானல் நீர், கயிற்றில் பாம்பு கட்டையிற் கள்வன் என்பதே போன்று பொய்யேயாதலால் ஆன்மாவரன தனக்கு இல்லவே இல்லை; ஆகையால்,

பேத அபேதங்களுக்கு அப்பாலாய்; புண்ணியா புண்ணியங்களுக்கு அப்பாலாய்; துவைத அத்வைதங்களுக்கு அப்பாலாய், பாவா பாவத்திற்கு அப்பாலாய்; ஞான அஞ்ஞானங்களுக்கு அப்பாலாய்; காரியா காரணங்களுக்கு அப்பாலாய்; மாயா அ மேகங்களுக்கு அப்பாலாய், பந்த மோட்சத்துக்கு அப்பாலாய், சுகதுக்கங்களுக்கு அப்பாலாய், காமியா காமியத்துக்கு அப்பாலாய், பிறப்பு இறப்புக்கு அப்பாலாய், வளர்தல் அழிதலுக்கு அப்பாலாய், உதய அஸ்தமானத்துக்கு அப்பாலாய் இவை முதலாக யிருக்கப்பட்ட தொடர்புகளுக்கு அப்பாலாய் தானே தன் மயமாயிருக்கப்பட்டது தான் தற் சொரூபமாகும் - ஆன்ம சொரூபம்.

''நித்தியம் பூரணமேகம் பரயார்த்தம் பரப்பிரம்ம
நிதானஞ் சாந்தம்!
சத்தியங் கேவலந்துகயம் சமந்திருக்கும் கூடஸ்தன் சாட்சு
பேதம்!

சுத்தமிலக்கியம் அஞ்சனுதனஞ்சிவன் தத்துவம் வீண்
சோதி ஆன்மா!
முத்தம் விபு சூக்கும மென்றிவ்வண்ணம் விதி குணங்கள்
மொழியும் - வேதம்''

இந்த எல்லையற்ற எல்லாவற்றுக்கும் அப்பாலான ஆத்ம சொரூபத்திலே அதிஷ்டானுக்யானம் [அடிப்படை அறி-யாமை] எனும் ஆவரண [மறைப்பாகுய] மாகிய மூலப்-பிரகிருதியின் விட்சேபம் [தோற்றல்] காரணமாக, மாத்-துவம் - காலத்துவம் - அகங்காரத்துவம் - பஞ்சதன் மாத்-திரை, சூக்கும தூலாதி, பாரார்தியண்ட, தேகாதி பிரபஞ்-சங்கள் எல்லாம் கற்பனையாகத் தோற்றுகிறது.

மூலப்பிரகிருதி என்கிற மித்யா புருடன் அகங்காரத்-துவம் என்கிற இல்லாத சித்திரகோலைக் கையில் பிடித்துக் கொண்டு, பஞ்சதன் மாத்திரை என்கிற கற்பனை பஞ்ச வர்ணத்தினுல் தூல சூக்குமம் என்கிற பொய்யான சித்-திரத்தை சூன்யமென்கிற ஆகாயத்திலே எழுதியது போல இருக்கின்றது.

''எழுதுவோனும் சித்திரமும் எதிர்காண் பொருளும்
இலத்தாகி
வழுவில்லாத விண்ணிடையே வந்து தோன்று மோவி
யந்தான்''
— ஞான வாசிட்டம்

இதுபோல எல்லையற்ற பெரு வெளியாம். தனே தன் மயமாகிய ஆன்ம சொரூபத்தில், அடிப்படை அறியாமை எனும் அதிஷ்டானுஞ்ஞானமான மூலப்பிரகிருதியும், தோற்றலான மகத்துவம் - காலத்துவம் அகங்காரத்துவமும் பஞ்சதன் மாத்திரை சூக்கும தூலப்பிரபஞ்சமும், சாக்கிர சொப்பன - சுழுத்தி - துரியாவஸ்தைகளும் மற்றும்

இந்த சொரூப காரணப் பெயர்களால் இணைக்கப்பட்ட மந்திரங்கள், மகா வாக்கிய உபதேசங்களை வாங்கிக் கொண்ட சீடர்களும், இவ்வித சீடர்களுக்கு உபதேசம் செய்த சற்குருக்களும், அவரது உபதேசங்களும், இந்த உபதேசத்தினுல் அப்பியாசிக்கப்பட்ட - சிரவண - மனன நிதித்யாசனங்களும்,

கர்மயோகம் - பக்தியோகம் - ஹடயோகம் - அஷ்டாங்க யோகத் தியானங்களும்,

இப்பிரபஞ்சம் அஞ்ஞானத்தால் தோன்றியதென்றும் ஞானத்தால் இல்லாமற் போயிற்றென்றும், ஞான யோகத்தால் தன்னைத்தான் பார்க்க வேண்டுமென்றும், அருட்—பெருஞ்சோதி ஒளிர்ந்ததென்றும், ஞான நிஷ்டையால் தன்னைத்தான் அறிய வேண்டுமென்றும், இப்போது அறிந்து கொண்டேனென்றும் சொல்லப்பட்ட இவை முதலான சகல சங்கற்ப பிராந்தி [மயக்கம்] களும், கானல் நீரில் தண்ணீர் எப்படி முக்காலங்களிலும் இல்லையோ அப்படியே முற் கூறப்பட்ட மூலப்பிரகிருதி முதல் சகல கற்பனைகளும் பிராந்திகளும்.

பேரின்ப உண்மையனுபவ வடிவமான தானான தன் மயமான தன்னிடத்தில் முக்காலங்களிலும் இல்லவேயில்லை.

''மையொடு கண்ணியும் மக்களும் வாழ்வும் மனையும் செந்தீ
மையா நின் மாயை உருவெளித் தோற்றம் அகிலத்துள்ளே
மெய்யாயிருந்து நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய் கணவாய் பழங்கதையாய் மெல்லப்
போயினவே''

—பட்டினத்தார்

"வேதாந்த சாஸ்திர அனுபவ பூர்வமாக சொரூபத்தைப் பாவிக்கும் எல்லாம், சூனியமாய், மனமும் சூனியமாய், சத்தியா சத்தியங்களில்லாமல் பூரணத்துவமாய் இருக்கிறது"

"ஒடுங்கியும் உதிப்பதுமாயுள்ள பிரபஞ்சம் எவனுக்கு எவ்விதமாகப் பிரவிருத்திக்கிறதோ; எவனுக்கு எல்லாம் உண்டாகியிருந்தும், உண்டாகவில்லையோ - அவனுக்கு எல்லாம் ஆத்ம சொரூபமாகவேயிருக்கிறது" — அவதூதகீதை

"இவ்வாத்மா அவியத்தன், அவிகாரன் எனச் சொல்லப் படுவான்" — பகவத் கீதை

"மாளுப் பரம் பொருளினும் வேறல்லாது என்றும் தாளுயிருக்கும் எனக்குப் பிரவிருத்தி எது? நிவர்த்திஎது? பந்தம் ஏது? முத்திஏது? — அஷ்டவக்ரகீதை

"பேதத்தை உண்டுபண்ணுகிற அஞ்ஞானமானது முழுதும் நாசம் அடைந்தால், ஆத்மாவுக்கும், பிரம்மத்துக்கும் இல்லாத பேதத்தை எவன்செய்வான்';.

— ஆதிசங்கரர்

"பேதமில்லாததாயும் - சத்தே மாத்திரமாயும் - வாக்குக் கெட்டதாயும் - தன்ஞல் அறியத் தக்கதாயும் இருக்கின்றது எதுவோ அதுவே ஆன்ம சொருபமான பிரம்மம்"

— ஆதிசங்கரர்

"சுவானுபவ மென்கிற அமிர்த ரசத்தின் ஆவேசத்தால்' திருசியத்தை விரும்பாதிருக்கின், —காற்றில்லாத இடத்தில் தீபம் போல அசைவற்றிருப்பதே நிர்விகல்ப சமாதி"

— வித்யாரண்யர்,

"சகல சங்கற்பங்களும் உப சாந்தியடைந்து [இல்லாதபடி] சோம்பலான தூக்கம்நீங்க, கற்சிலேயோல் அசைவற்றிருப்பது உத்தமமான சொரூப நிலே-முத்திநிலே"

— ஞானவாசிட்டம்

சகல சங்கற்பங்களும் உபசாந்தியடைந்து மனம்பூரணத்துவ முற்று பேரின்ப மேலிட்டால் ஏற்படும் அகம்பிரக்ஞாத சமாதியானது யோகிகளுக்குப் பிரியமானதாம்; எனவே, ஆன்ம நேய அன்பர்களே! முமுட்சுகளே!; சத்தபிரகரணம் எனும் இந்நூலில் கூறப்பட்ட போதனைகளை நன்கு வாசித்து பொருள் உணர்ந்து, இந்நூலின் பயனாகிய சொரூபநிலை அனுபவமாக, சமாதிசாதனையில் ஒன்றி சிவானுபூதியுறுவீர் களாக!

''துன்னுமாயை அவத்தைகள் தானிலை
தொடரு மீசனும் சீவனுந்தானிலை
பின்னமின்றி யகண்ட மதாகிய
பிரம்மமே யகம் என்று தெரிந்திடும்
சின்னமில் திடமாகிய போதமே
சீவன் முத்தனுக் கான விலக்கணம்
என்னலானந்தத் தாண்டவமாடு நம்
ஈசன் தன் பரிபூரணரூபமே''

''தோற்றுகின்ற சகபர சீவரின்
தொடர்பு யாதொன்றும் சற்றுமில்லாமலே
சாற்றுவார்க்கு மனங்கட் ககோசர
சச்சிதானந்த தற்பரமாகவே
வேற்றுமையின்றி என்றுமிருப்பதே
விதேகமுத்தன் இலக்கணமென்றிடல்
ஏற்றுமானந்தத் தண்டவமாடு நம்
ஈசன் தன் பரிபூரணரூபமே''

—ரிபுகீதை

அன்பார்ந்த முமுட்சுகளே!

பிறப்பிறப்பாம் துன்பப்பவக் கடலுள் மூழ்காது. பந்தங்களில் கட்டுப்படாது. சர்வதுக்க நிவர்த்தியும், பரமானந்தப் பிராப்தியாம், முத்திக்கு இலக்காகும்; விடுதி-

சென்மத்தவர்கள் சிரவணம் செய்யத்தக்கதான - காரண- மகா காரண - நிசாந்தனுபூதிப் பிரகரணங்களை சிரவணித்- துய்ய - சற்குரு ஸ்ரீ ஓம்பிரகாசநாதர் நம் அனைவர் மீதும் ஆட்கொண்டு கருணை பாலிக்க குருவருளைப் பக்தியோடு துதித்து உய்வோமாக!

குரு வாழ்க! குருவே துணை!

சத்தப்பிரகரணம் சம்பூரணம்!

ஓம் — தத் — சத்

குரு வாழ்க! ஓம் சிவோகம்! குருவே துணை!

# குரு - சிஷ்ய சாகஸம்

இருவிழிகள் உலகறிந்தும் தனையறியாதுதுபோல்
யானறியும் பொருள லதிங்குகனை அறியாததினுல்
கருவிடைப் புக்கின்ப துன்பக்கடலிடையே சுழன்று
கண்கலக்கப் படுவேனைக் கருணை விழியதனுல்
அருவினைகளற நோக்கி ஆணவமே போக்கி
அகம்அகம் என்றிருந்தவெலாம் அறிவுகொண்டே நீக்கி
பருவமதில் பதம்தாக்கிக் கற்பனைகள் போக்கிப்
பாழாக்கித் தானுக்கும் பரகுருவைப் பணிவாம்''

1. **குருமார்கள் வகை :-** உலகில் பலவகைக் குருக்கள் இருக்கின்றனர். அவர்களை முக்கியமாக ஐந்து வகை- யாகப் பிரிக்கலாம் அவை 1. காரிய குரு 2. காரண- குரு 3. சற்குரு 4. ஞானகுரு 5. விகித குரு என்பதாகும்.

1. காரிய குரு:- சாதாரணமாக, கல்வி, மொழி, எண், எழுத்து ஆகியவற்றையும், உலகியல், உடலியல், உள்ளியல், விஞ்ஞானம், கணிதம், சரித்திரம், புவியியல், வானவியல், உயிரியல் ஆகிய இன்னும் பற்பல உலக ஞானத்தைப் பயன் கருதி பலாபேட்சையுடன் கற்பிப்பவர் காரிய குரு.

2. காரண குரு :- சரியை, கிரியை யாதிகள், கல்யாண, கருமாதி, பிதுர்க்கடன் முடித்தல், பக்தி, மந்திர உச்சாடனம், தெய்வ வழிபாடு, ஆலயபூஜை, கைங்கரியங்கள் செய்பவர்கள் — பயன்கருதி செயலாற்றுபவர்கள் காரணகுரு ஆவர்.

3. சற்குரு :- கைமாறு கருதாது, யோக சாதனைகளையும், அஷ்டாங்க யோகமும். அஷ்டமாதி சித்துகளையும், போதித்துச் சீடனைச் சகலகலா வல்லவனுக்குபவர் சற்குரு ஆவார்.

4. ஞானகுரு :- மக்கள் மீதுள்ள கருணையினால் வேதாந்த ஞான நூல்களைப் பயன்கருதாதுப் போதித்து, யோகஞானுபதேசம் புரியும் உத்தம சீவன் முத்தரான ஞானியே ஞானகுரு ஆவார்.

5. விகிதகுரு :- பக்குவியான சற்சீடனுக்கு தத்துவாதிகளை நியதி களைந்து தத்துமசி உபதேசமாக வாக்கிய இலட்சியார்த்தத்தை உபதேசித்து சீவனை சிவமாக்கும் இலட்சிய குரு பகவானே விகிதகுரு சீடனின் பூர்வ-புண்ணிய வசத்தால் அவனுக்கு வாய்க்கப் பெறுவார்.

இன்னும் பற்பல விதங்களாகக் கூறப்படும் குருக்களெல்லாம் இவ்வைந்து வகையுள் அடக்கமாகும். மற்றும்,

ஒன்றும் தெரியாத அசடாயிருந்தும், எல்லாம் தெரிந்தவராக நடிக்கும் குருக்களும், சில சித்து விளையாட்டுகளால் மக்களை மயக்கும் போலிக் குருக்களும் இக்காலம் மிக மலிந்துள்ளார்கள்.

''குறி என்ற உலகத்தில் குருக்கள் தாமும்
கொடியமறை தேவமெல்லாங் கூர்ந்து பார்த்து
அறியாமல் பிரம்மத்தை உணராமல் தான்
அகந்தையாய் பெரியோரை அழும்பு பேசி
விரிவான வேடமிட்டுக் காவிபூண்டு
வெறும் போலியாய் அலைவான் நாயைப் போல
பரிகாசமாய் யோகதண்டும் ஏந்திப்
பார்தனிலே குறடு இட்டு நடப்பான் பாரே''
— காகபுசுண்டர்

## 2. ஞானகுருவின் இலக்கணம் :-

அருளும் அன்பும் அறிவும் அமைந்த அருந்தவ சீலராகவும் ஆங்கனம் குறித்த அம்முதற் பொருளோடு தான் பிறன் ஆகாதவராகவும் இதயத்தின் உணர்வு என்றும் இலங்கும் இனியவராகவும் ஈகையும் தயாளமும் இன்சொலும் இயைந்தவராகவும் உயர்ஞான யோகவேதாந்த போத உபதேசிகராகவும் ஊண் உடல் பிணம் ஆம்எனும் உண்மையை உணர்ந்தவராகவும் எண்ணற்ற நூல்களை இதயத்தில் பதித்து என்றும் இயம்புபவராகவும் ஏகமாம் சகஜ சமாதியில் எக்காலமுமிருப்பவராகவும் ஐயம் திரிபு அற ஆத்ம ஞானத்தை அருள்பவராகவும் ஒன்றே பிரம்மம் ஒன்றே ஆன்மா என்கிற உறுதி வாய்ந்தவராகவும் ஓது வேதாந்த உண்மை இதுவென, ஓர்ந்துணர்ந்தவராகவும், ஔடதமாக இருந்து அன்பர் பிறவிப்பணியை அகற்றும் மருத்துவராகவும் அஃகம் சுருங்கிய சீவன் முத்த ஆண் பிள்ளைச் சிங்கமாகவும் உள்ள தன்மை வாய்ந்தவரே'

ஞானோபதேசம் செய்யக்கூடிய ஞானகுரு - விகிதகுரு ஆவார்கள். மேலும் குரு இனிப் பிறவாமுத்தியைத் தந்து ஜென்ம சாபல்யம் செய்தார்.

புகழ், பெருமை, செல்வம், பொறுமை, குடி, கர்வம்
இகழ்வாதி இன்றி எவர்க்கும் — தரும் விடையில்
கன்னன், மலை, ஆழி, கார் அருக்கண், சீயமுறை
அன்னவன் காண ஆசிரியனும்'' —திருக்திருசியவிவேகம்

மற்றும் சுப்பிரமணியர் ஞானத்தில் யதார்த்தகுரு இலக்கணம் கூறுவது காண்க.

''பொன் வெள்ளி செய்பவனும் பெரியோன் அல்லன்.
புகழான அஷ்டசித்தன் பெரியோன் அல்லன்.
முன்நின்ற வைத்தியனும் பெரியோனல்லன்.
மூச்சடங்கி எழும்புபவனும் பெரியோனல்லன்.
சின்னமென்றே குழியிருப்போன் பெரியோனல்லன்.
திரமாகக் கௌணமிட்டோன் பெரியோனல்லன்!
தன்னைத்தான் அறிந்தவனே பெரியோனுவான்!
தரணியில் அறியாதார் சண்டிமாடே''
— சுப்பிரமணியர் கோவை

மேலும், ஜெனன, மரண பவத் துன்பத்தை ஒழித்து ஏகபரம் நான் எனும் உண்மை சொருபத்தை உணர்த்தும் குரு சிவபெருமானுக்கு சமம் ஆனவராவார்.

''ஞான நிஷ்டையை நல்கும் தேசிகர்
மான முற்றிடும் மானிடன் அல்லனுல்
வானமுற்று வளர் கைலைப்பரன்
தானெனத் தினம் சாற்றிடலாகுமே''—நிஷ்டானுபூதி

## 3. சற்குரு - யார்?

வான் விரித்த வாய்மை அறிவு மழைபோல் அருளல், நிலம்போல் பொறுமை, அருங்கலை ஆழம், ஆன்மீக உணர்வு, மலைபோல் மாண்பு, மலர்போல் புன்னகை, தாய்போல் உள்ளம், தந்தைபோல் பரிவு ஆகிய சமரச குணவான் சற்குரு ஆவான்.

''சர்வ மகா மந்திரமும் உபதேசிப்போர்
சாமான்ய குரவர் எனச் சாற்றலாகும்
இருமையிலாப் 'பரப்பிரம்மம் நீயே' என்று இங்கு
இணையற்ற உபதேசம் செய்கிறுனே
பெருமைமிகு சற்குரு என்று உரைக்கலாகும்
அரிய பரம் நீ என்போன் ஆசான் ஆறேன்''

— ரிபுகீதை

ஆதலால் தக்கஞான குருவைத் தேர்ந்தெடுத்து யோக-ஞான உபதேசம் பெறவேண்டியது மிகவும் அவசியமாகும்.

**சற்சீடன் தன்மை :-**

''ஆகாயம், வன்னி, அடல்வீரன், தேய்வத்தி
மீகாமன் சொற்களவாள் வேய்கூத்தன் — தீகாய்
பவன் மந்திரி அன்னம் பால் பசுவை ஒப்பான்
அவனே சற்சீடன் என்பதாம்''
[வன்னி—நெருப்பு; அடல்வீரன்—போர்வீரன்;
தேய்பத்தி—ஊதுபத்தி; மீகாமன்—கப்பல் மாலுமி
வேய்—மூங்கில்; கூத்தன்—நடிகன்]

அறிவில் சிறந்த ஆன்மநேய அன்பர்களே!

மேலே குறிப்பிட்ட கவிதைகளால் சீடன் ஆகிய மாணக்கன் எவ்வித குணநலன்கள் உடையவனுக இருக்க-வேண்டும் என்பதை தெரிந்து கொள்ளவேண்டும்.

**ஞானம் பற்றிய சீடன் தன்மை ;-**

ஆத்ம ஞானம் அடைந்து முத்தி அடையவேண்டும் எனும் ஆர்வம் கொண்ட முமுட்சுவான சீடன் இன்னும் சில தன்மைகள் பெற்றிருக்க வேண்டும். சூக்குமமான நுண்ணறிவுடன், ஞானநூல் சிரவணமும் வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக குருபக்தி மிகவும் அவசியமாகும்.

1. நித்தியமானது எது? அநித்தியமான - அழியக்கூடிய வஸ்துக்கள் எது என்று அறியும் : விவேகம்.
2. இகம் எனும் இவ்வுலகத்தின் சுகபோகங்கள், பரம் எனும் மேலுலக சுகபோகங்கள் ஆகியவற்றில் கொஞ்சம் கூட ஆசாபாசம் வைக்காமல் பற்றற்ற துறவு மனதிடமான விராகமாகிய வைராக்கியம்.
3. மனதடக்கம், புற ஐம்புலன் அடக்கம், தியாக மனப்பான்மை துன்பங்களை பொறுமையோடு சகித்தல், சுக-துக்கங்களில் சமமாய் இருத்தல், ஞான மொழிகளில் குருவாக்கியங்களில் சிரத்தை ஆகிய சட்சம்பத்து;
4. இனிப்பிறவா முத்தி அடைய வேண்டும் என்கிற தீவிரமான நாட்டம் வைத்து, தலையில் நெருப்புப் பற்றியவன் தண்ணீரைத்தேடி, நாடி, ஓடுவது போல முத்தியடைவதில் தீவிரதர ஆர்வமே, முமுட்சுத்துவம் ஆகிய சாதன சதுட்டய சம்பன்னுகவும் இருக்க வேண்டும். அப்படிப்பட்ட முமுட்சுவான - இருவினை ஒப்பு மலபரிபாகமுள்ள ஒருவன்,

"ஆன இம்மனைவி மக்கள் அர்த்த ஏடனைகள் மூன்றில்
கானவர் வலையில் சிக்கிக் கைதப்பி ஓடும் மான் போல்
போனவன் வெறும் கையோடே போகாதவண்ணம்
சென்று
ஞான சற்குருவைக் கண்டு நன்ருக வணங்கினனே"

— கைவல்யம்

முத்தி நெறி அறிய, தக்க வழி காட்டும் சற்குருவை நாடி, ஞானத் தாகத்துடன் அலைந்து, சரியான - உத்தம ஆத்ம ஞானியான ஞானசற்குருவை அணுகுவான் சற்சீடன் ஞான அதிகாரியான சீடன் வெயிலில் கிடக்கும் புழு துடி- துடிப்பதுபோல ஞானம் அடையத் துடிக்க வேண்டும். அப்படிப்பட்ட தீவிர தர முமுட்சுவான ஒரு சீடன்,

''தேன் நிரம்பு மலரை அளி தேடுவதுபோல் எங்கும்
தேசிகனைப் பலகாலும் தேடிக் காண்டளவில்
ஞானகுரு இவன் பாகம் சோதிக்க வேண்டி
நடுக்கங்களுறவே எந்நாளும் செய்வித்தும்
ஈனமாம் தொழில் அதனில் ஏவி மிக விடுத்தும்
இரக்கமிலாதே அழித்தும் இழி உரையால் வைதும்
மானம் இன்றிச் செயும்போதும் குருபக்தி வழுவா
வாய்மையனுக்கு உயர் நிஷ்டை வழுத்திடவும்
தருமால்'' மற்றும்

''உடற்கு உயிர் போலும், கட்கிமை போலும் ஊசியும்
நூலுமே ஒத்து
படப்பொறி அரவைப்பிடி எனப்பிடிக்க பாயும் வெம்புலி-
தனைத் தழுவ
தொடர்க்கரும் தணலை எடு என எடுக்க தும்பி முன்
அஞ்சிடாதிருக்க
விடற்கரும் சித்தம் என்னவே உதவும் — விவேகியர்க்கு
அளித்திடலாமால்''

ஆன்மீக தவசீலர்களே! உலகாதாயக் கொள்கை உயர்ந்து உலாவும் இக்காலத்திலே தேவநெறி என்றால் வெகுண்டோடும் இக்காலத்திலே இத்தகைய தன்மை வாய்ந்த சீடன் கிடைப்பது மிக அரிதாகும்.

நல்ல உத்தம சற்குரு கிடைத்தாலும்கூட, முத்தியில் ஆர்வமுள்ள தீவிரதர - ஏன் - மந்ததர - சிஷ்யன்கூட கிடைப்பது அரிதாகும். உண்மையான சீடனுக்குக் குருவைக் கண்டவுடன்,

''வேர்க்கும் கண்ணீர் ததும்பும் கம்பிக்கும் மெய்நடுங்கும்
வார்த்தை நழுவும் மனம்பதறும் — கார்க்கதமாய்க்
காந்தும் ரோமாஞ்சலியாம், காதலித்தார்க்கு
ஏய்த்த குணங்கான் இவை எட்டும்'' —ஒழிவிலொடுக்கம்

இவ்வித எட்டுக்குணங்கள் ஞானுதிகாரியான சீடனுக்கு ஏற்படவேண்டும். இப்படி இல்லாதிருக்கும் மந்தபுத்தியுள்ள சீடனுக்கு ஞானேபதேசம் ஏருது.

''ஒரு கோடி சூரியர்கள் ஒக்க உதித்தாலும்
குருடர்க்கு இருள் அகலாக் கோட்போல் - மருள்தீர
ஆசான் உரைத்தாலும் அஞ்ஞானச் சித்தர்க்குப்
பாசாதி நீங்காது பார்'' —சிவஞான வள்ளலார்.

சற்குருவும் சீடனும் தம்பதி போல்வர் :—

பூமியும் பண்பட்ட பூமியாக இருந்து, வித்தும் நல்ல வித்தாக இருந்தால் செடி நன்ருக முளைவிட்டு செழித்து வளர்ந்து பலன்தரும். இல்லையேல்,

''பக்குவம் இல்லார்க்கு அருள்ல், பாவிக்கு அறம் ஓதல்
மட்குடத்தை பொன் ஆக்க வாஞ்சை கொளல்-
— சொர்க்கமிலார்க்கு

கன்னிக்கு காமநூல் கட்டுரைத்தல், கண் இலாதார்க்கு
பொன் ஆரம் பூட்டுதல் போலாம்'' -சிவஞானவள்ளலார்

குரு உபதேசத்தைக் கேட்டு, அதைச் சிரணிக்கும் சக்தி சீடனுக்கு வேண்டும்.

"மேலாம் சதுட்டய சாதனங்கள் மேவி நிறைந்த சீடர்க்- குரைப்பின்
மேலாம் 'அது நான்' எனத் திடமாய் விளங்கும்! அவை இலாதவர்க்கு
மேலாம் பரமன், மான் மழுவாய் விளங்க உரைத்தும் விளங்காது
மேலாம் சாதனங்கள் வர மேவ வேண்டும் சாதுசங்கம்"

—அத்துவித உண்மை.

எனவே, ஞானகுருவும் சீடனும், நாயகனும் நாயகியும் போல மனமொத்து உண்மையாகயிருத்தல் வேண்டும். நல்ல சீடனுக்கு குருவார்த்தையில் நம்பிக்கையும் பக்தி சிரத்தையும் வேண்டும்.

குருபகவான் திருவாய் மலர்ந்தருளும் ஞானுபவ சொற்களை வேதவாக்குப் போலப் பாவித்து பயபக்தியுடன் கேட்டு, [சிராவணித்து] மனதில் பதிந்து கொள்ளவேண்டும் குருநாதர் கூறும் உபதேசங்களை மனதில் பதிய வைத்துக் கொண்டு, சதா சிந்தித்து சிந்தித்து உட்பொருளை அறிந்து சந்தேக விபரிதமற்று இருக்க வேண்டும்.

"தந்தை தாய் ஆவானும் சார்கதி இங்காவானும்
அந்தமிலா இன்பம் நமக்கு ஆவானும் - எந்தன் உயிர்
தானுகுவானும் சரண் ஆகுவானும் அருட்
கோன் ஆகுவானும் குரு"

—தத்துவராயர்

சற்குரு பகவானுக்கு உத்தம சீடன், ஆடல், பொருள், ஆவி- ஆகிய இம்மூன்றும் தத்தம் செய்து குரு காணிக்கை ஆக்கி, சரணுகதியாக வேண்டும்.

"சொற்பமிலா அகண்டபரி பூர்ணமான
சுத்தமதாம் பரப்பிரம்மம் நீயே என்று
செப்பியிடும் குருபரனே குரு ஆகின்றான்
செப்பியவாறு அறிந்தவனே சீடன் ஆறுன்"

''ஆதலினால் 'பரப்பிரம்மம் நீயே' என்றிங்கு
அருள்பவனே ஆசிரியன் எனவே-ஓர்ந்து
சாதகமாம் சற்குருவின் உபதேசத்தை
சத்தியமாய் நம்பி அதைச் சாதிப்போனே
போதமிலா அகண்டப் பரப்பிரம்ம ஞானம்
பெற்று அதினால் பிறப்பு இறப்பாம் பந்தம் தீர்ந்து
போதகன மான சிவ வடிவே யாவான்
புகன்றிதிலோர் அணுவேனும் ஐயமில்லை''

—ரிபுகீதை

குருவும் சீடனும் ஒன்றே.

ஆன்மநேய தவசீல அன்பர்களே! முடிவில் குருவும் சீடனும் ஒன்றே! குரு பகவானே அகண்டாகார சிவ சொரூபமாக விளங்குகிறார். சீடனையும் சிவமயமாக்கி விட்டார் குளவியோர் புழுவினைக் கூட்டினில் கொண்டுவந்து வைத்துக் குளவியாக்கிவிடும் கொள்கைபோல குருநாதன் எப்படி சிவ வடிவாக விளக்குகிறாரே அப்படியே சீடனையும்ஆக்கி விடுகிறார்.

''காயனை யகாயனுக்கு கண்டனை அகண்டனாக்கிய
பேயனைப் பிரம்மம் 'ஆக்கி பிறப்பு இறப்பு இலாமையாக்கி
தாயினும் இனியன் ஆகி வந்தெனை தகைந்து ஆட்கொண்ட
தூய சற்குருவே சீடனைத் தனதாக்கிக் கொண்டார்''

—சிவஞான வள்ளலார்

ஏனெனில் இருப்பது ஒன்றே! குருவில் சீடன் ஐக்கியமாகி-விடுகிறான்

''என்னுடைய மனது புத்தி இந்திரிய சரீரமெல்லாம்
என்னுடைய அறிவினாலே இரவி முன் இமமே ஆக்கி''
என்னுடன் நீயும் நானும் ஏகம் என்று ஐக்யம் செய்த
என்னுடை குருவாய் தோன்றும் ஈசனை இறைஞ்சினேனே''

—கைவல்யம்

''உபாதியற்ற சிவமாம் எனக்கு உபதேசமேது?
சாஸ்திரமேது?
சீடன் ஏது? குரு ஏது? அடைதற்குரிய பேறுதான் ஏது?''
—அஷ்டவக்ரகீதை

தவசீலர்களே? முமுட்சுகளே! குரு சிஷ்ய இலக்கணங்களை ஒருவாறு குறிப்பிட்டனன்.உண்மையான குரு விசுவாசமும், குரு பகவான் உபதேச வாக்கியத்தில் நம்பிக்கையும் சிரத்தையும் கொண்டு, குருநாதர் கூறியபடி யோக - ஞான சாதனைகளை கிரமப்படி அப்பியாசித்து ஞான நிஷ்டையில் பழகி ஆத்மஞானி ஆகி சிவன் முத்திப்பதம் இவ்வுடல் இருக்கும்போதே அடைந்து விடுவாயாக! அதற்கேற்ற ஆற்றல் குருவருளால் பெறுவாயாக!

''ஆவி உடல் பொருள் மூன்றும் குத்தம் என்றே
அருட்குருவின் சந்நதியில் சித்தமாக
மேவி அளித்து அறிவு உண்மைப் பொருளைப்பற்றி
மெய்த்தவத்தில் மிக்கோராய் நிற்கும் சீடன்
பாவையோடு இல்லறத்தில் வாழ்ந்திட்டாலும்
பரிவினெடு துறவறத்தில் இருந்திட்டாலும்
பூவுலகில் ஒட்டியும் ஒட்டாமல் வேருய்
''புளி ஓடு பழம்' போல் ஒத்திருப்பர் தானே''
—பரமானந்த தீபம்

ஓம்
தத் சித்

அன்புசால் தவசீலர்களே! இவனது குருநாதர் அருளால் இவனுல் ஆக்கப்பட்ட இச்சிறு சுவடியை வாசித்து, உண்மையையுணர்ந்து உண்மை ஞானிகளைக் கண்டறிந்து ஆத்ம ஞானம் அடைந்துய்வீராக!

குரு வாழ்க! குருவே துணை!! குருவடி பணிந்து.

# அத்வைத ஞான மன்றம்

| | | |
|---|---|---|
| நிறுவனர் | : | ஞானயோகி இரத்தின சற்குரு<br>அலங்கியம். பெரியார் மாவட்டம் |
| மன்றக்குருநாதர் | : | தவயோகி சற்குரு ஸ்ரீ N.V. இராமன்<br>52, கரூர் ரோடு<br>கொளிஞ்சிவாடி 638 673<br>பெரியார் மாவட்டம் |
| தலைவர் | : | தவத்திரு K.S. சுப்பிரமணியன் MSc (Agri)<br>22, வரதன் தெரு,<br>கோபிசெட்டி பாளையம் 638 452<br>பெரியார் மாவட்டம் |
| செயலாளர் | : | தவத்திரு P. அழகர்சாமி D.M.E.,<br>தமிழ்நாடு பேப்பர் மில்ஸ்,<br>புகழூர் S.F. 639 113 |
| கொள்கைபரப்பு செயலாளர் | : | தவத்திரு கு. பெருமாள்<br>71, P.V.K. சாலை,<br>பொத்தனூர் 638 181<br>சேலம் மாவட்டம் |

குறிக்கோள் : வேதாந்த நெறிபற்றி விவேகியாகி யோக ஞான சாதனைகளால் இல்லற வாழ்க்கையிலிருந்தே இனிப்-பிறவா முக்தி அடைதல்.

குறிப்பு : வேதயோக ஞான விளக்கங்களுக்கும், குண்டலினி யோகப் பயிற்சி மற்றும், சகஸ்ரார உபதேசம் பெறவும் தவயோகி சற்குரு ஸ்ரீ N.V. இராமன் அவர்களை நாடவும் சாதி, மத, இன, பால், வயது, வேறுபாடின்றி யாரும் உபதேசம் பெறலாம்.

குரு வாழ்க !



குருவே துணை !

கொளிஞ்சிவாடி. தேதி :

*ஞானத்தாகங் கொண்ட சகோதர சகோதரிகளே !*

இந்து மதம் என அழைக்கப்படும் ஆதியந்தமற்ற, வேதாந்த சனாதன தர்மம், அத்வைதம் துவைதம், விசிஷ்டாத்வைதம் போன்ற பல உட்பிரிவுகளைக் கொண்டது, இறைநிலை, பிரபஞ்சத்தின் தோற்றம் பற்றிய உண்மைகளை விளக்கும் இம்மதம் மனிதன் இறையோடு ஒன்றுதலை அதாவது தன் பழைய சுயநிலையை அடைவதற்கு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு படித்தரங்களை அமைத்துக்காட்டுகிறது, இந்நான்கு நிலைகளும் முக்கியமானாலும் இறுதியான ஞான நிலையே முடிவானது, இந்நிலையை அடைந்த ரிஷிகளும், சித்தர்களும், ஞானிகளும் " உள்ளுணர்வாய் நின்றவர் தம் உணர்வுக்குள் உணர்வாண்டி " என்ற அத்வைத நிலைப்படி, தான் வேறு, தன் தலைவனான இறை வேறு அல்ல என உணர்வால் உணர்ந்து பேரின்ப நிலையை அடைந்தனர்.

இறுதியான இந்த அத்வைத ஞானத்தை அறியாமையில் உழலும் மனிதர்கள் உள்ளங்களில் விதைக்க அவ்வப்போது ஆதிசங்கரர் போன்ற அத்வைத ஞானிகள் அவதரித்து வந்துள்ளனர், இந்த அத்வைத ஞான நிலை உலக மக்களிடையே குறைந்து, சரியை, கிரியை போன்ற துவைத பாவனைகளில் மக்கள் அதிகம் ஈடுபட்டபோது, ஆதிசங்கரரின் குரு பரம்பரையில் தோன்றி, ஓம் அசல் பீடத்தை நிறுவி அத்வைதக் கொள்கையை நிலைநாட்டியவர் ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளாகும், அவருடைய குரு பரம்பரையில் அவதரித்த மகான்களே சபாபதி சுவாமிகள், பரஹம்ச ஏகாம்பர தேசிகர் சுவாமிகள் ஓம்பிரகாச சுவாமிகளாகும். ஓம் பிரகாச சுவாமிகளை விகித குருவாகக்கொண்டு ' அகம்பிரம்மாஸ்மி ' என்ற அத்வைதக் கொள்கைப்படி ஞானப்பிழம்பாக விளங்கியவர் ஞானயோகி இரத்தின சற்குருநாதர் ஆவார், தமது 57-ஆவது வயதிலிருந்து உரையுணர்வு கடந்த சமாதி நிலையில் அதாவது துரிய ஞான பூமியில் பிரம்மவரனாக, மதிமண்டலத்திலே கனல் செல்ல அமுதுண்டு பழங்காலத்து ரிஷிகள் அடைந்த பல ஞானானுபவங்களின் உண்மைகளை உணர்ந்து அவ்வனுபவங்களை மக்களின் நன்மைக்காக ஞான நூல்களாகக் குறைந்த விலையில் வெளியிட்டு வந்துள்ளார்.

உலகிலுள்ள எல்லா உயிர்களும் இனிப்பிறவாத பேரின்ப நிலையை அடைவதையே குறிக்கோளாகக்கொண்டு வாழவேண்டும். மனிதர்கள் உடலையே நான் என்று கருதி தன்சுய சொருபானந்த ஆன்மாவை மறந்து மயங்கி, தன் உடலை வளர்த்துவதிலும் காப்பாற்றுவதிலும் தன் இன உற்பத்தியைப் பெருக்குவதிலும் ஆயுட்காலத்தை முழுவதும் செலவிடுகின்றனர், இன்னும் சிலர் குடும்பக் கடமைகள் ஒழிந்தபின் கடவுட் கொள்கையில் ஈடுபடுவேன் என்று அலைகள் ஓய்ந்தபின் கடலில் குளிக்க விரும்புவதுபோல் உள்ளார்கள், கடல் அலைகள் என்றும் ஓயப்போவதுமில்லை அவர்கள் குடும்பக் கடமைகள் என்றும் முடியப்போவதுமில்லை, அதனால் குடும்பத்திலுள்ளபோதே யோக, ஞான சாதனைகள் செய்தல் வேண்டும். இதனால் குருவருளாலும் ஞானக்கினியின் வலிமையினாலும் இந்நிலையில் எரிக்கப்பட்டுக் கடமைகள் ஒழிகின்றன.

ஞானயோகி இரத்தின சற்குருநாதர் அவர்கள் மக்களிடம் பேரிரக்கம் கொண்டு அவர்கள் உய்வதற்கு அத்வைத ஞான மன்றத்தை அலங்கியத்தில் தோற்றுவித்தார் அவருடைய பிரதம சிஷ்யர்களில் ஒருவரான ஸ்ரீ சுகப்பிரகாச சுவாமிகள் தற்போது சாதி மத இன வயது வேறுபாடின்றிக் கடைமை ஒளிந்து பேரின்பம் பெற மிக எளிமையாகவும் சித்தர்கள் முறைப்படியும் யோக ஞான சாதனைகளை உபதேசம் செய்து வருகிறார். குருவருளால் அனைவரும் பயனடைவீர்களாக !

தேவையான நூல்களுக்கு குறிப்பிட்டுள்ள தொகையுடன் தபால் செலவு ரூ. 1-60 சேர்த்து அனுப்புக பதிவுத் தபாலில் பெற நூல் செலவுடன் ரூ. 6-50 சேர்த்து M. O. செய்க.

---

குறிப்பு : இப்பிரசுரத்தைப் படித்துப் பயன்பெற்ற அன்பர்கள் தங்கள் நண்பர்களுக்கும் பயன் அடையச்செய்யுங்கள்.

அனுப்புதல் :

**ஸ்ரீ சுகப்பிரகாச சுவாமிகள்,**

குருநாத அத்வைத ஞான மன்றம்,

எண். 68, கரூர் சாலை, கொளிஞ்சிவாடி - 638 673.

(வழி) தாராபுரம். பெரியார் மாவட்டம்.

திரு.

நூல்-அஞ்சல்.

ஓம்

இருப்பது ஒன்றே!

அது அது ஆகி, அதுவே நான் ஆகி

அண்ட சராசரங்களான கற்பனைத்

தோற்றமாகப் பரிணமித் திலங்குகிறது

ஸ்ரீ கலைவாணி அச்சகம், தாராபுரம்.

பிறவி ஒழிந்து பேரின்ப முக்தி பெற விரும்புவோர் அனைவரின் கரங்களிலும் உள்ளங்களிலும் இடம் பெற வேண்டிய அத்வைத ஞான மன்றத்தின்

# ஞான நூல்கள்

| | | |
|---|---|---|
| 1 | ஞானானு பூதி வேத போதம் | ரூ. 15-00 |
| 2 | குண்டலினி யோகப் பயிற்சி | 5-00 |
| 3 | மரணமிலாப் பெருவாழ்வு | 5-50 |
| 4 | அதிகாலையில் ஆத்ம சிந்தனை | 4-75 |
| 5 | இறுதியில் மனிதன் எதை அடைவது | 4-50 |
| 6 | ஞானோதயம் | 4-50 |
| 7 | வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் | (அச்சில்) |
| 8 | கூடுவிட்டுக் கூடுபாய்தல் | 3-00 |
| 9 | வேதாந்த ஞானசாரம் | 1-00 |
| 10 | கருவறையிலிருந்து கல்லறை வரையிலும் | 3-00 |
| 11 | சும்மா இருக்கும் சுகம் | (அச்சில்) |
| 12 | ஆனந்த உலகம் | 4-50 |
| 13 | ஞான பூமிகள் ஏழு | 5-00 |
| 14 | சத்தப் பிரகரணம் | 6-25 |
| 15 | ஆன்மாவை அறிய அத்வைதம் | 6-50 |
| 16 | அத்வைதமே முக்திக்கு வழி | 5-00 |
| 17 | ஞான நிஷ்டையின் அனுபவங்கள் | 7-50 |
| 18 | அத்வைத ஞான போதம் | 4-25 |
| 19 | அத்வைத ஞான சாரம் | 4-50 |

தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி :

**சற்குருநாதர் சுகப்பிரகாச சுவாமிகள்**

குருநாதர் அத்வைத ஞான மன்றம்,

எண். 68, கரூர்சாலை, கொளிஞ்சிவாடி-638 673

வழி தாராபுரம். பெரியார் மாவட்டம்,

நேரில் சந்திக்க கொளிஞ்சிவாடி வந்து

ராதா செட்டியார் மில்ஸில் விசாரிக்கவும்.



பிறவி ஒழிந்து பேரின்ப முக்தி பெற
விரும்புவோர்
அனைவரின் கரங்களிலும் உள்ளங்
களிலும்
இடம் பெற வேண்டிய அத்வைத ஞான
மன்றத்தின்

## ஞான நூல்கள்

| | | |
|---|---|---|
| 1 | ஞானனுபூதி வேத போதம் | 12-00 |
| 2. | ஞானோதயம் | 4-50 |
| 3. | குண்டலினி யோகப் பயிற்சி | 5-00 |
| 4. | இறுதியில் மனிதன் எதை அடைவது | 4 50 |
| 5. | அதிகாலையில் ஆத்ம சிந்தனை | 4-75 |
| 6 | அத்வைதமே முக்திக்கு வழி | 5-00 |
| 7. | ஞான பூமிகள் ஏழு | 5-00 |

தேவையான நூல்களுக்கு குறிப்பிட்டுள்ள தொகையுடன் தபால் செலவு ரூ1-00ம் சேர்த்து அனுப்புக. பதிவுத்தபாலில் பெற நூல் விலையுடன் ரூ 5-50ம் சேர்த்து M.O செய்க.

நூல்கள் கிடைக்குமிடங்கள்:

தவத்திரு H. ரெங்கசாமி
8-A, ஐந்தாவது தெரு,
கிருஷ்ணபுரம் காலனி,
மதுரை—625 014

தவத்திரு T.P சுந்தரம்
தி ரூபி மேட்ச் ஒர்க்ஸ்,
தொட்டியம்—621 215
திருச்சி மாவட்டம்

தவத்திரு J. தொன்னராமன்,
காரக்கோரை
ஜெகதளா P.O.
நீலகிரி மாவட்டம்—643 202

தவத்திரு A. அய்யாசாமி MSc,
Department of Chemistry
V.L.B.J.A. இன்ஜினியரிங் காலேஜ்
கோவை புதூர் 641 042